# முத்தி நெறி

இராமகிருஷ்ணாநந்த ஸ்வாமிகள்
ஆங்கிலத்திலருளிய
சொற்பொழிவின் மொழிபெயர்ப்பு

சு. அ. இராமசாமிப் புலவர்,
கருப்பக்கிளார். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

மயிலாப்பூர்
ஸ்ரீராமகிருஷ்ண மடத்தாரால்
பிரசுரிக்கப்பட்டது

1927



மதராஸ் லா ஜர்னல் பிரஸ், மயிலாப்பூர்.

# முகவுரை

மேனாட்டுக் கல்வியாலும் நாகரிகத்தாலும் இந்து மதம் சீர்கேடடைந்து சிதைவுற நேர்ந்த காலத்து அதனைக் காத்து நிலைத்திருக்கும்படி செய்த வள்ளலாம் ஸ்ரீராமகிருஷ்ணர் வங்கநாட்டில் அவதரித்தாரெனினும் இந்நாள் அவரைப் புவிமுழுதும் போற்றித் துதிக்கின்றனர் மாந்தர். தவமிகுதியால் தாம் அனுபவவாயிலாகக் கண்ட அரிய உண்மைகளையும், மனிதவர்க்கத்தின் நன்மைக்காகத் தாம் கொண்டுவந்த செய்தியையும் உலகமுழுதும் பரவச்செய்யத் தக்க தருண வந்ததாக அவருக்குத் தோன்றிய காலத்து, விரிந்த மலரைக்கண்டு ஆங்கு விரைந்தோடும் வண்டினம்போல் அண்டையிலுள்ள பக்தர் குழுவினர் அவரிடம் அணுகி ஆனந்தித்தனர். பலர் சிஷ்யர்களாகிச் சிசுருஷை செய்தனர். சேய்மையிலுள்ளோரும் அவரது உபதேசங்களைக் கேட்டுப் பயன்படும்படி செய்ய இச்சிஷ்யர்களிற் சிலர் தமது வாழ்நாளை அர்ப்பணம் செய்தனர். அவர்களில் ஒருவராவர் "முத்தி நெறி" என்ற இச்சிறு நூலை ஆங்கிலத்தில் இயற்றியருளிய பெரியார். **ஸ்ரீமத் இராமகிருஷ்ணாநந்த ஸ்வாமிகள்** என்பது அவர் திருநாமம். இவர் சுமார் 14 வருடம் சென்னையில் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவரின் போதனைகளைப் பரவச்செய்யும் தொண்டில் அமர்ந்திருந்தனர். இவர் ஆங்கில பாஷையில் மிக விற்பன்னரா யிருந்தமையின் மதவுண்மைகளை மேனாட்டினர்க்கும் விளங்கும்படி அவர்களது பௌதிக தத்துவ சாஸ்திரங்களுக்கு ஒவ்வும்படி எடுத்துக்கூறும் திறனுடன் விளங்கினர். உள்ளது ஒன்றேயாயினும் அதனைக் கால தேசங்களுக்கியைந்தவாறு விளக்கிக் காட்டுதல் அவதார புருஷர்களுடைய

வும் மகான்களுடையவும் கடமையாக இருந்து வந்துள்ளது. ஆதலின் ஸ்ரீமத் இராமகிருஷ்ணாநந்த ஸ்வாமிகள் வேத புராண இதிகாஸங்களிலுள்ள உண்மைகளை இக்காலத்திற்குத் தக்கவாறு விளக்கிக் கூறியுள்ளார்.

> "உரியசிற் சுகமாய் நித்தமா யொருவி னௌதெனக் கேட்டு
> மற்றதனிற்
> பிரியமற் றினமு முனமுறும் பொல்லாப் பிறவியே பெற
> விரும்பும்"

மக்கள்மீது கருணை புரிந்து முத்தி நெறியை வெகு சுலபமாகக் காட்டும் வண்ணம் இப்பெரியார் ஆங்கிலத்தில் இயற்றிய Path to Perfection என்னும் நூலை நமது தமிழ்நாட்டுச் சகோதரர்கள் அறிந்து உய்யுமாறு தமிழில் மொழிபெயர்த்து அச்சிட்டுள்ளோம். தமிழகத்தார் அனைவரும் இச்சிறு நூலை வாசித்து முத்தி நெறியை யுணர்ந்து அதன்வழி நிற்பாராயின், அதுவே எமக்கு மட்டிலா ஆனந்தத்தை அளிப்பதாகும்.

மயிலாப்பூர்.
10—10—1927

ஸ்வாமி யதீசுவரானந்தா

# முத்தி நெறி

## இராமகிருஷ்ணானந்த சுவாமிகள்

ஆங்கிலத்திலருளிய

சொற்பொழிவின் மொழிபெயர்ப்பு

நமது ஓயா முயற்சி யொவ்வொன்றும் ஒவ்வொரு குறையினின்றும் எழுவது. இவ்வாறெழும் முயற்சிகளின் தொகுதியையே வாழ்க்கை யென்கின்றோம். முயற்சிகளின் தொகுதி சீவியமாதற்கு அவை அறிவறிந்து எழுந்தவை யாதல் வேண்டும். ஓயாது சுழன்றோடுகின்ற ஒரு பொறியின் முயற்சியைச் சீவியமாகக் கருதுவதில்லை. அறிவறிய ஆற்றும் முயற்சிகளின் தொகுதியே வாழ்வெனப்படும். இனி சீவிய முயற்சி யொவ்வொன்றும் ஒவ்வொரு அவாவினின் றெழுவதாயிருக்கும். என்னை யிம் முயற்சிக்கண் புகுத்தியது எது? ஏதாவதொன்றை யடையவேண்டுமென்ற அவா. நீங்களும் ஏதாவது தெரிந்துகொள்ளலாமென்றோ, வேறு ஏதானும் உதவி பெறலாம் என்றோ இங்கே வந்திருக்கிறீர்கள். ஏதாவதொன்றை யடைவோம் அல்லது ஏதாவதொன்றை யனுபவிப்போம் என்ற எதிர்நோக்கில்லாமல் எதையுஞ் செய்ய நாம் முற்படுவதேயில்லை. இப்பரிசே யெழுகின்ற முயற்சிகள் உள்ளக் குறைவையும், அவ்வுள்ளக் குறைவு அமைதியின்மையையும் காட்டுகின்றன. அவ்வமைதியின்மை நம்மிடம் அமைந்து

கிடக்குங்காறும் நம் முயற்சி ஓயாது; நமது உள்ளக் குறைவை நிறைவிக்க முயன்று கொண்டே யிருப்பீர்கள்.

ஆனால் மனிதனுக்கு உண்மையில் ஏதாவது குறை யுண்டா? இல்லை யென்றே கண்ணபிரானைப்போன்ற பெருந் தெய்வமக்களும், இயேசு நாதரையும் புத்த தேவரையும் போன்ற அவதார மக்களும் கற்பித்துள்ளார்கள். மனிதன் வியத்தகு விசித்திரமானவன் என்பதே அன்னார் அருள் மொழி. பிறவான், இறவான், குறைவில்லான், பேரின்ப முள்ளான், சுயம்பு, சுயஞ்சோதி என்றின்ன வண்ணம் மனிதனைக் குறித்துப் பெரியார் பேசியுள்ளார்கள். அழித்தற்கடவுளது முத்தலைப் படையும் அவனை அழிக்க வல்ல ஆற்றல் படைத்ததன்று. அவன் இயல்பாகவே என்று முள்ளான்; என்று மழிவில்லான். இன்ன பண் பினன் மனிதன் என்றால், நான் யார்? நானும் மனித னென்றே திரிகின்றேன்! ஆனாலோ மூன்றரை முழவுயரந்தா னிருக்கிறேன், பிறந்தேன், செத்தும் போவேன், பல குறை களுமுடையேன். குறையில்லான் இவன் என்று தோட்டி தொட்டுத் தொண்டைமான் வரையிலும் ஒருவனையேனுஞ் சுட்ட மாட்டுவீரா? உண்மையில் மனிதன் குறைகள் மலிந்த சீவனே. அன்னைவயிற்றி னீங்கிய அஞ்ஞான்றே குழந்தை கதறுகிறது. ஏதோ ஒன்று வேண்டியே யன்றோ? மனிதன் பிறப்பதுங் குறையிலே, இருப்பதுங் குறையிலே, இறப்பதுங் குறையிலேதான். குறைபற்றித் தோன்றிக் குறைபற்றி வாழ்ந்து குறைபற்றியே சாகின்றான்.

அற்றேல் இந்த மனிதனுக்கும் அந்த மற்ற மனித னுக்கும் உள்ள உறவுதானென்ன? ஒருவன் ஏனையவனுக்கு எங்ஙனம் ஈடாதல் கூடும்? ஒருவன் மற்றவனோடே ஒருப் படுதல் எப்படி முடியும்? எல்லாக் குறைகளையும், எல்லா

அச்சங்களையும், தோன்ற லழிவு எல்லாவற்றையுங் கடந்த வன் ஒருவன்: மற்றவனோ நானாவகைப்படும் அச்ச அவாக் கள் நிறைந்தவனாயும், பிறந்து இனி இறந்துபட வேண்டி யவனாயுமாகிறான். இவ்வகையான் முற்றும் மாறுபட்டு நிற்கும் இருவருக்கும் எவ்வகை யுறவுதானிருக்கக் கூடும்? என்றாலும் ஓர் உறவு உண்டு. வரம்புட்பட்டுத் தோன்றிச் சாகிற இந்த மனிதனே வரம்பிகந்த தன தியற்கையைக் குறிக்கொண்டு நிற்கிறான். மனிதன் ஒருபோதும் அமைதி யற்றவனாய் எப்பொழுதும் இடம்விட்டு இடம் பெயர்ந்து உழல்கின்றான். ஏனென்றால், என்று முலவாத உள்ள நிறைவை அவனுக்கு எப்பொருளுந் தர மாட்டுவதில்லை யாகலான், அவன் ஒருபோதும் நிறைவெய்துகிறா னில்லை. வரம்புட் சுருங்கிய இந்த நிலையிலே மன நிறைவு ஏற்படா மல் மனிதன் அலைகின்ற உண்மையொன்றே அஃது அவன் றன் இயற்கை நிலையன்று என்று காட்டுகின்றது. மனி தன் அளவற்ற அவாவுடையவனாகி மேலும் மேலும் வேண்டுகின்ற ஆவல் தணியப்பெறாதவனாகிறான் என்ற வுண்மை அவன் தனது அமைப்பிலேயே வரம்பு கடந்தவ னென்பதையும் வரம்புட் கிடக்கும் எதனாலும் உள்ள நிறை வெய்தமாட்டா னென்பதையும் தெளிவுபடுத்து கின்றது.

எந்த மனிதனும் வரம்புட் சுருங்கிய தனது நிலையி னாலே உள்ளக் குறை கொண்டு நிற்கக் காணலாம். உங்க ளில் எவரும் உள்ளநிறை வுடையவரில்லை. திங்கள் தோறும் நூறு ரூபாய் தேடுகிற ஒருவர் அம்மட்டோடு தம் மனமுவந்து அமைதி யடைந்து விட்டதாகச் சொல்லிக் கொள்ளலாம்: அதுதான் சோம்பல்! மடிவேறு, மனவமைதி வேறு. உண்மை யமைதி யின்னதென்று நசிகேதர் நமக்குக்

காட்டியுள்ளார். செல்வமும் ஒரு தனியரசும் அழகிய மாதரும் தருவதாய் இயமன் கூறினன். ஆனல், நசி கேதரோ, மெய்ப்பொருளொன்றே தன்னுள்ளத்தை நிறை விக்கும் என்றும், வேறொன்றும் வேண்டற்பாற்றன்று என் றும் நன்குயறிந்திருந்தார். ஆனல் நூறு காசு வாங்குகிற உமக்கு இருநூறு கொடுத்தால் மறுத்து விடுவீரா? ஆகவே உள்ளது போதுமென்ற உள்ள அமைதி உண்மை யில் உமக்கு ஏற்பட்டு விடவில்லை யென்பது தெளிவாகிறது. உம்மை உள்ளபடி ஆராய்வீராயின் உமது அவாவுக்கு அறுதியேயில்லை யென்று கண்டுகொள்வீர். "யாவற்றிற் குந் தலைவன் யான், அண்டரண்டம் யாவும் எனக்குரியவை, எனக்கு ஒரு குறையுங் கிடையாது, சாவையுங் கடந்து விட்டேன், நான் எவருக்கும் உத்தரவாதியன்று" என்றிவ் வாறு இருமாந்திருக்க வல்ல அஞ்ஞான்றே நமது கழி பேரவா முடிவுபெறும். இவ்வேளை வருமளவும் நமது கழி பேரவா நம்மைவிட்டு ஒருபோதும் அகலுத லில்லை. வரம்புகளைவிட்டு நீங்க அவாவுகிறீர்: "வரம்பில்லேம், வீத லில்லேம், வாழ்வேம் எஞ்ஞான்றும்!" என்று சொல்லிக் கொள்ளக்கூடிய நிலை வருமளவும் அமைதிபெறமாட்டீர்கள்.

இந்த நிலையைத்தான் முத்தி அல்லது வீடுபேறு என் பது. ஆகவே இந்தச் சிறு மனிதன் எல்லையெல்லா மிகுந்த அந்தப் பெரிய மனிதனுக்கு முற்றும் மாறுபட்டு நிற்ப தாகத் தோன்றினும், இந்தச் சிறு சீவன் அவ் அனந்த சீவ னேடு ஒன்றியபோதல்லால் அமைவுறுன்: அதுதான் அவ னது இயல்பான அமைப்பு என்று இஃது காட்டுகின்றது. இந்திய வேந்தர் வேந்தனை யாண்ட ஷாஜஹான் மன்னன் கொலுவீற்றிருந்த மயிலணைமீதே மீனென்றை விடுத்து அதற்குத் தலைவணங்கிக் கும்பிடுவீராயினும் அம்மீன்

உவகை யடையுமோ? தண்ணீரே தன தியல்புக் குகந்த நிலையமாதலால், "என்னைச் சாக்கடைக் குழியிலாவது எறிந்துவிடும், நீரினின்றும் நீக்கி வையாதீர்!" என்றல்லவோ முறையிடும்? இந்த மாதிரியாகவே இழந்து விட்ட நும தியற்கையை நாடி அமைதி யற்றுத் தவிக்கிறீர்கள்.

அமைதியின்மை யில்லாதவரே யில்லை. ஆனல் இழந்துவிட்ட தன தியற்கை நிலையை, வரம்பெல்லாங் கடந்த அந்தப் பெரு நிலையை, அவாவி அமைதியற்று அலை கின்றவனே அருளாளி. தனது தற்போதைய சிறு நிலை பற்றி அமைவுற்றுக் கிடக்கின்றவனே மருள் கொண்டு தவிக் கின்றவன். இம் மனமுவந்த மனிசன் மனிதனேயில்லை; விலங்கின் ஒரு சிறிதும் மேம்பட்டவ னன்று. உணவு மட்டும் ஊட்டி வந்தால் ஆனையொன்றை ஆயிசு முழுதுங் கட்டி வைக்கலாம்; வேறு கவலையின்றி அமைந்து நின்று விடும். இப்பரிசே அமைந்து கிடக்கின்ற மக்கள் மாக் களின் மிக்கவரன்று. உண்பதினும் உறங்குவதினும் உயிர்த்தலினும் அச்சுறுவதினும் நாமும் நம்மி னிழிந்த விலங்குகளும் ஒன்றே. இவைகளின் மேற்பட்ட புனிதச் செய்கையொன்று ஆற்றுதற்கு அறியோமாயின் நாம் விலங்குகளினின்றும் விலங்குவதெங்ஙனம்?

மனக்குறைவு தோன்றுமிடத்தி லெல்லாம் மிகுமாட்சி பொதிந்த மூளை உண்டென் றுணர்க. எந்தப் பெருமக னது வரலாறைப் படித்தாலும் அவர் மேலும் மேலும் ஆராய்ந்து அமைவுறாமல் ஓயா துழைற்றிய விவரந் தெரிய வரும். மேனேக்கு ஒன்று மின்றி ஓய்ந்து கிடக்கிறவர்கள் தான் கூலியாட்க ளாவதற்கெனத் தலையிலெழுத்து வாங் கினவர்கள். அவர் செக்கைச் சுற்றிச் சுற்றி நாள் முழு துஞ் சுழன்றும் தாம் சென்ற வழியி னீங்க மாட்டாத

எருதுகளைப்போல்வார். இவர் பள்ளி பயின்ற அக்காலத்திலே கற்கக் கவலை கொள்ளாது தமது வகுப்பின் கடைசியிலிருந்து காலங் கழித்தனர். அவரோடேயே வேறு சிலர் ஓய்வு கொள்ளாமல் உழைத்துப் படிப்பில் மேனேக்குக் கொண்டு பாடுபட்டு வந்தனர்; அவர்கள்தான் இன்றைக்குப் பெரிய அதிகாரிகளாகவும் மிக்க கனவான்களாகவும் ஆயிருக்கிறார்கள். எல்லாப் பெருமக்களுடைய வரலாறுகளையும் ஊன்றிப் படித்தால் அவர்களனைவரும் அமைந்து கிடவாமல் ஓயாதுழைத்ததாலேயே பெருமை யடைந்தனர் என்றுணரலாகும். ஆதலால் ஓயாதுழைத்தலை யொரு போதும் நிறுத்தாதீர்கள்.

கொஞ்சத்தோடே என்றும் அமையாதீர்கள். நமது ஆற்றல் அளவற்றது; நமக்கு எந்தக் குறைவுங் கிடையாது; இவ் வரம்பிகந்த நம தியற்கையை யடையுங்காறும் நிற்கப்படாது. நமதறிவு சுருங்கியதென்று கருத வேண்டாம். சாக்கிரட்டீசுக்கிருந்த மூளையும் நியூட்டனுக்கிருந்த நுண்ணறிவும் நம்மிடம் உண்டு. ஆனால் தூசும் மாசும் படிந்து மூடிப்போகும்படி விட்டுவிட்டீர்கள்; அவ்வளவுதான். அந்தத் தூசைத் துடைத்துப் பேரவாவைக் கிளப்பி நம துழைப்பை யெழுப்பிவிடுவீரானல் ஆற்றலனைத்தும் நம்மகத்தே மறைந்து கிடக்கக் காணுவீர். நமக்கு வரம்பென்பது இல்லவே யில்லை. கடவுளுக்குந் தமக்கும் இடையே வெளியும் வேலியும் எப்பொழுதும் ஏற்படாமல் என்று மொருதன்மையராய்ப் பண்டிருந்த பெருஞானிகளி லொருவரைப் போன்று நீவிரும் வரம்பெல்லாங் கடந்தவரென்றே யறிக.

ஒருவனைப் பாவியென்று சொல்வதே எதினு மிக்க பாவமென்று நமது மறை நூல்கள் அறைகின்றன. உம்

மைப் பாவியென்றுங் குறையுள்ளவரென்றும் கருது மக் கணமே எல்லையில்லாத உமதமைப்பை மறந்து உடம் போடும் உள்ளத்தோடும் ஒன்றி நின்றீர். உடம்போடும் உள்ளத்தோடும் இவ்வாறு ஒன்றி நிற்பதே உமது இடர்க ளெல்லாவற்றுக்கும் எழுவாயாவது. உமது எல்லை கடந்த இயற்கையை யடைய விழைவீராயின் எல்லையுட் சுருங்கி நிற்கு மிந்தச் சிறு நிலையைப் பற்றிய பற்றெல்லாம் கடிந்து விடும். உமதுடம்பையு முள்ளத்தையும் மறந்துவிடும். உமது உடம்பையும் உள்ளத்தையும் உம்மின் வேறு பிரித் தறிந்து கொள்ளும். உண்மையில் இடைவிடாமல் இதைத்தான் செய்து கொண்டிருக்கிறீர். "நான் வளர்ந்த வன் அல்லது குள்ளமானவன்; கறுத்தவன் அல்லது சிவத் தவன்; மெலிந்தவன் அல்லது தடித்தவன்" என்றின்ன வண்ணமாகவா எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருக் கிறீர்? முகக் கண்ணடியின் முன்னர் நிற்கும்போதுதான் இவை யெல்லாம் எண்ணுவீர். நோயின்மை யாவ தென்ன? தனதுடம்புண்மை பற்றி ஒரு ஞாபகமும் இல்லாதிருக்கும்போதே ஒருவன் ஒருவனை நோயுமற்றவ னுவான். தலைவலி யேற்படும்போதுதானே தலையைப் பற்றிய ஞாபகம் வருகிறது; காலில் நோவுண்டான வழி தான் அவ்வுறுப்பின் நினைவு எழுகின்றது. ஆகவே நீர் ஆன்மாவே; ஆவியே. உமதுடம்பு எவ்வளவோ வலுவோடு உம்மீது ஊர்ந்தழுத்திய போழ்தினும் நீர் அதை மறந்து விடுவதினின்றும் அது தடுக்க மாட்டாது. அழகியதோர் காட்சியிலோ இன்னிசை யொன்றிலோ ஈடுபட்டிருக்கின்ற போது உடம்பை மறந்து விடுகிறீர்; அதாவது அவ்வேளை மட்டிலுமாவது உமதுடம்பைக் கடந்து விட்டீர். இதுதான் உமதுண்மை யமைப்பு; நீர் உவகை யெய்துவதற்கு அது தான் காரணம். ஆறுதலாயிருக்கும்போதும், ஒய்வுற்றிருக்

கும்போதும், எண்ணத்தி லாழ்ந்து தன்னை யிழந்து நிற்குந் தறுவாயிலும் உடம்பைப் பற்றிய ஞாபகமேயில்லை. இந்த நிலையை யலைக்கத் திடீரென்று ஏதேனு மேற்பட்டவழியே அதைத் துன்பம் என்கிறீர்.

உவகையிலே நினைவு மாண்டு போகின்றது. சிந்தனையி லாழ்ந்திருக்கும்பொழுதும் உடலுணர்ச்சி யில்லாதபோழ் தும் நீர் எங்கே போயிருக்கிறீர்? உமதுடலினின்றும் உள் ளத்தினின்றும் புறப்பட்டு விட்டீர்; அதுதான் உவகை. உவகையே உமது உண்மை யியல்பு; அதனாற்றான் இன் பத்தையே விரும்புகின்றீர். மனிதன் இன்பத்தை நாடி நாடி எப்போதும் அமைதியற்றவனாய் விடுகிறான்; ஏதோ ஓர் இடர் இடுக்குவதனாலேயே இவ்வாறு தவிக்கிறான். மனிதன் உவகையைத் தேடி ஓயாதுழைத்து வருகிறான். ஊர் விட்டு ஊர் போயும், நாடுதோறுஞ் சென்றும் அவன் உழல்வது இழந்துவிட்ட தனதுள்ள மகிழ்ச்சியை நச்சியே யாகும். கடவுளும் கழிபேருவகையும் ஒன்றாதலால், இப்பேரின்பத் தேட்டமும் கடவுள் நாட்டமும் வேறு வேறல்ல. அவை ஒரே பொருளைத் தருவன. அதனா லேயே "கடவுள் இல்லையென்று தனதுள்ளத்துள்ளே ஓரறி விலி சொல்லிக்கொண்டான்" என்று வழங்கி வருகிறது. இறைவனிடத்திலிருந்தே எல்லா இன்பங்களும் போந்தன வாதலால் இன்பந் தேடுகிற ஒவ்வொருவனும் கடவுளை நாடுகிறவனாகின்றானன்றோ?

இறைவனைப்பற்றி நாம் கூறிப்போந்த இலக்கணம் ஆனந்தம் என்பதாம். சூனியவாதிகளிற்கூட எவரும் இன்பத்தை யவாவாதா ரில்லை; அவ்வின்பமே இறைவன். படைப்பு முழுவதும் ஆனந்தத்தினின்றுந் தோன்றியது; ஆனந்தத்திலே உளதாவது; அவ் வானந்தத்திலேயே

அமிழ்ந்துபோகும். நாமும் அண்டரண்டம் யாவும் கடவுளினின்றுந் தோன்றினோம்; கடவுளின்பாலே வதிகின்றோம்; கடவுளிடத்துக்கே போவோம். எனவே ஆனந்தம் கடவுள் என்பன ஒரு பொருட் கிளவிகள். ஆனந்தத்திலே ஒவ்வொருவரும் ஈடுபடுவதினாலே எவரும் தாம் சூனியவாதியென்று கூறுதல் அமையாது; ஆனந்தமே கடவுளாகலான், உண்மையில் ஒவ்வொருவரும் வேண்டுவது ஆனந்தமே. ஆயின், எவ்வகையானந்தம் நீவிர் வேண்டுவது? தகர்ந்து போகாத் தனியின்பமேயாகும். நீவிர் விழைவது இன்பமே யாதலால் ஏதோ ஒரு சிறிது இன்பந் தருகின்ற இந் நிலையாத சிற்றின்பத்தையுங் கைக்கொண்டீர்; ஆனால் முடிவேயற்ற கழிபேரின்பமே உமக்கு இலக்காகும்.

என்றுந் தகராப் பேரின்பமொன்றே கடவுளென்ற பேராற் போற்றப்படுவது. தகர்ந்தழியும் இன்பம் சிற்றின்பமென்று பேர்படும். அவ்வப்போது சிறுகச் சிறுக இன்பந்தரும் இச்சிற்றின்பத்தோடே நீர் சற்று அமைந்து கிடக்கலாம். ஆனால் தகர்ந்து போகாத, என்றுமுள்ள, எல்லையில்லாத இன்பமே உமது குறியாகும்; அதை யடைந்து அனுபவிக்கவேண்டும். அவசர அவசரமாக அமுது அருந்திவிட்டு அலுவற் கூடத்துக்கு ஓடோடியும் போய் நாள் முழுதும் நலிந்து உழைக்கின்ற ஒருவர் உண்மையில் தேடுவது இன்பமே; இன்பத்தைப் பணந் திரட்டுவதால் அடைந்து விடலாமென்று நம்பிப் பாடுபடுகின்றார். ஓர் மூலையிலிருந்து தமதுள்ளத்தை யொடுக்கிச் சுற்றுமுள்ளவைகளை மறக்கமுயன்று தமக்குள்ளேயே தம்பிரானைத் தரிசிக்கத் தவமுயலும் இன்னொருவரும் அதே காரியந்தான் செய்கிறார்.

இனி இவ்விரண்டு முறைகளையும் ஆராய்வோம். ஒருவர் தமக்குவேண்டிய உண்டியையும், வேறு இன்பப்

பொருள்களையும், பலவகை மகிழ்ச்சிகளையுந் தரவல்ல பணத்தையே உண்மையில் நாடி யுழைக்கின்றார்; தமக்( வேண்டற்பாலன யாவையும் அதிகாரவாயிலாக அடைலாகும் என்றுன்னி அவ்வதிகாரத்தை நாடிப் பணந்தேடிக் கொள்ள முயலுகிறார். ஆனால் இந்த முறை மிகவும் உறுதியற்றது. அவர் பணத்தைத் திரட்டிக்கொள்ளலாம்: அது கொடுத்த நல்லுணவைச் சீரணிக்க முடியாதிருத்தல்கூடும் அது கொண்டுவந்த இன்பங்களை நுகர இயலாது போகலாம். கல்கத்தாவிலே யிருந்த கோடீசுவர ரொருவரை எனக்குத் தெரியும்; அவருக்குக் கஞ்சி நீர்தான் அருந்த இயலும்: ஆகவே அவர் தமது குற்றேவலாளனது அளவுகூட இன்பம் நுகர்ந்தாரில்லை. இனி, பொருள் எவ்வள விருந்தபோதினும் அதை வைத்து ஒருவர் எத்தனைநாள் தான் வாழ்ந்துவிடமுடியும்? உடம் புள்ளவரையுந் தானே! உயிர் வாழ்வைப்போன்ற அவ்வளவு உறுதியற்ற வேறெதுவும் இவ்வுலகத்திலில்லை யென்றறிவோம். தொட்டிற் குழவிக்கும் இளங்காளைக்கும் பழங் கிழவற்கும் செல்வருக்கும் வறியவருக்கும் எந்தக் கணத்திலும் சாவு வந்து விடலாம். ஆகவே, உடல் வேறு நாம் வேறு என்றெண்ணமல் அதனேடொன்றியும், அவ்வுடலினதும் உள்ளத்தினதுமாகிய இன்பமே நமதின்பமென மயங்கி யுழைத்தும் வருவதால் அவ்வின்பம் எவ்வளவு அழிதன் மாலையது என்பது எளிதில் உணரற்பாற்று.

ஒவ்வொருவரும் ஆறுவகை மாறுதல்களை யடைந்து தீரவேண்டும். கருப்பையிலே சிசுவொன்றிருந்தது; கருப்பையிலே. ஒரு சிசு இருந்தமையாற்றான் சிசுவொன்று வெளிப்பட்டது. அது பிறந்த பின்னர் உருவத்திற் பெருகிப் பலவகைத் திரிபுகளையும் அடைகின்றது—பைய

ளய்க் காளையாய் மனிதனாகவேண்டும். அதற்குப் பின் ஏற்படுவதென்ன? படிப்படியாய்க் குறையவேண்டியதே. கண்கள் தம் வலியிழக்கும்; காதுகள் கேட்கமாட்டா; கையுங்காலுஞ் சோம்பும்; நினைவு தடுமாறும். உயிர்வாழும் ஒவ்வொருவருடைய வாழ்க்கை வரலாறும் இதுவேயாகும். ஒருடம்போடு பிணைக்கப்பட்டுத் தம் முள்ளம் ஐயவடிவே யாகத் தவிக்கும் இத்தகையவரொருவர் என்று முலவாப் பெருவாழ்வை யெங்ஙனம் எதிர்பார்க்க இயலும்?

ஆனாலும் எவரும் சாகவிரும்புகிறதில்லை. சாவை யொப்ப மனிதன் வெறுப்பது வேறே எதுவுமில்லை. ஆனால் நமக்கிருக்கும் வாழ்வு இதுவேயாயின், மனிதன் சாவி னின்றுந் தப்பமுடியாது. எனவே இன்பம் எய்தலாம் என்று நம்பியிருக்க இயலாது. வாழ்வு என்பதன் பொருள் என்ன? வாழ்வாவது இருப்பது, இருக்கப்போவது. சாவா வது இராமை, இராமற்போவது. உண்மையினின்று இன்மை ஒருபோதும் வரமுடியாதென்றும், உண்மை இன்மையாவது எப்போதும் முடியாதென்றும் அறிவோம். இதுபோலவே வாழ்வு சாவாகவாவது சாவு வாழ்வாக வாவது மாறமுடியாது. ஆகையால் ஒருவன் வாழ்கிறு னென்றால் அவன் சாதலில்லை. ஆனால் சாவாத அந்தப் பெருவாழ்வை அவன் எங்கே காணுதல்கூடும்? அக்காட்சி பெறுதற்கு அவன் தனதுடம்பைக் கடந்து செல்ல வேண்டும்; உடம்பைக் கடப்பதற்குப் பிரபஞ்ச முழுவதை யுங் கடந்துபோகவேண்டும். ஏனென்றால், இப்பிரபஞ்ச முழு மையும் எளிதிலே முறிந்துபடக்கூடிய உமதுடம்பிலேயே தங்குவதாகும். கண்களின் மீது உருவ உலகனைத்தும், காதுகளின்மீது ஓசை உலகனைத்தும், நாவின்மீது சுவை யுலகனைத்தும் அடங்கி யிருக்கின்றன.

உறக்க நிலை இதை மிக எளிதில் விளக்கும். கண்கள் காணுமட்டும் உமக்கு உருவங்கள் உளவாகும்; மூக்கு முகரு மட்டும் நாற்றங்கள் உளவாகும்; காதுகள் கேட்குமட்டும் ஓசைகள் உளவாகும்; இவ்வகையே ஒவ்வொரு புலன் மாட்டு மாகும். உமது கண்களிலும் காதுகளிலும் ஏனைப் புலனனைத்திலும் நீர் உள்ளவழி, அந்நிலை விழிப்பு நிலை யாகிறது. இனி நீர் உள்ளத்தோடே ஒன்றி நின்றவழி யுளவாகும் சிந்தனை நிலையொன்றுண்டு. புலன்களினின்றும் உள்ளத்தினின்றும் அப்புறப்பட்டு நிற்கும் இன்னொரு நிலை யுண்டு. அந்நிலையே ஆழ்ந்த உறக்க நிலையாகும். அந்நிலை யிலே உமது நண்பன் வந்து உமதண்டையிலே இன்னிசை மிழற்றிக் கொண்டிருக்கலாம்; நீர் உமது காதுகளில் இல்லை யாதலால் அத்தீங்குரலைக் கேட்கிறீரில்லை. உமதுடம்பி லேயே யிருக்கிறீர், அதிலையமில்லை; ஆயினும் உமது காது களிலேனும் ஏனைப்புலன்களிலேனும் நீர் இல்லை. உமதுள் ளத்தினின்றும் புலன்களினின்றும் விலகி யிருக்கிறீரென் றாலும் உமதுடம்பிலேயே வதிகின்றீர்; அதனாற்றான் ஆட்டி னால் எழுந்துவிடுகிறீர். எழுந்துவிடுகிறீர் என்றலென்ன? உமதுள்ளத்துக்குத் திரும்புகிறீர்; உமது புலன்களுக்குத் திரும்பிவருகிறீர். நீர் தூங்கிக்கொண்டிருந்தபோது உமது அகமுடையாள் அங்குற்று அண்டையிலிருந்தாள். அது கூட உமக்குத் தெரியாதுபோயிற்று. உம்மைச் சுற்றிலு மிருந்த எதையும், பிரபஞ்சமுழுதையுமே, உணர்ந்தீரில்லை. ஆகையாலே பிரபஞ்சத்தின் உண்மை நீர் உமது உள்ளத் திலும் புலன்களிலும் இருப்பதைப் பொறுத்திருக்கிறது என்றாகிறது. நீர் உறங்கியபோது உமக்கு உலகம் இருந் ததா? அதைப்பற்றிய எந்த நினைவும் இல்லை. ஆகையால் இந்தச் சிற்றுடம்பு எளிதில் முறிந்துபோகக் கூடியதாய்த்

தோன்றினும் (நிரம்பவும் எளிதிலே முறிந்துபடக்கூடிய தென்பதில் ஐயமேயில்லை) இப்பிரபஞ்ச முழுவதுந் தாங்குவதற்குரிய முட்டுக்காலாவது அதுவே என்றுகிறது. ஆகவே பிரபஞ்சத்தினின்றும் விலகிப்போவதற்கு உள்ளத்தினின்றும் புலன்களினின்றுமே விலகிப் போகவேண்டுமென்று தெளிவாகிறது. அதைச் செய்து முடித்தபோழ்து உமக்கு உரிமையான என்று மூலவாப் பெருவாழ்வைக் கண்டுகொள்வீர். இம்முறை பற்றித்தான் உமது முன்னோர் என்று மழியாத தமதமைப்பைக் கண்டனுபவித்தனர். வெளிப்புலன்களையும் உட்புலனுகிய உள்ளத்தையுங் கடந்து அப்பாற்பட்டு அவ்வனுபவத்தைக் கையாண்டனர். இதைச்செய்ய மாட்டுவீராயின் என்றென்றும் அழியாத உமது பெருவாழ்வையும் அடைவீர். அதுகாலை அறுதியற்ற தனிப்பேரின்பம் உமக்குரியதாகும். இதுதான் வீடு.

ஒரு நெறி நம்மை நமது குறியினின்றும் விலக்கிச் சேய்மைக் கண்ணும், ஏனையதொன்று குறித்த இலக்கின் கண்ணும் உய்க்கின்றன என்று இதுகாறுங் கூறிப்போந்தவையான் உணரலாகும். பொருள்தேடுவது முதலாக நீங்களனைவரும் போகிறவழி தப்பு நெறியாகும்; ஏனெனில் உங்கள் உடம்பைப் போற்றுகிறீர்கள். நீங்கள் கும்பிடுஞ் சாமி அதுவொன்றே. இந்தச் சாமியை வழிபடுகிறதனுலே உமது பெண்டாட்டியை நேசிக்கிறீர்; இவ்வழிபாட்டாலேயே நல்லுணவுகளை நச்சுகிறீர்; அழகிய காட்சிகளையும் இனிய ஓசைகளையும் இன்ன பலவற்றையும் விரும்புகின்றீர். ஆனல் ஒரு தலைவனைச் சேவித்தற்கு ஏதாவது சம்பளம் எதிர்பார்ப்பதுண்டே: உமதுடம்பாகிய இந்தச் சாமிக்கு உழைத்ததற்கு, அது கொடுப்பதென்ன? நீர் யாவற்றினும் மிக எதை வெறுக்கின்றீரோ அந்தச் சாவுக்கே உம்மைச்

செலுத்திவிடுகிறது. பல பிறவிகளிலும் இந்தத் தலைவனுக்கு உழைத்தீர்; அவ் வொவ்வொரு பிறவியிலும் சாவையே பரிசாக அளித்தது. இது உண்மைச் சேவகமாகுமா? உண்மையான பரிசு தரும் உண்மைச் சேவை செய்ய விழைவீராயின் உண்மை யாண்டவற்குத் தொண்டுகொள்ளும். அப்படிக் கொள்வீராயின் அழியாப் பெருவாழ்வு பெறுவீர்.

இத் தொண்டு நெறி உண் முகமானது; புறத்தேயாகாது. அழியா வாழ்வைப் பெறுவிக்கும் பெருநெறி புறத்தே கழிகின்ற உழைப்புக்களால் ஏற்படுவதில்லை; அஃது ஏற்படுவது உண்முக உழைப்பினாலேயாகும். வலுவெல்லாந்திரட்டி உண் முகப்படுத்தவேண்டும். இதைச் செய்யாதவழி இழிந்த விலங்குகளினும் நீர் மேம்பட்டவராதலில்லை. உண்மை வாழ்க்கை உமதகத்தேயன்றிப் புறத்தே நிகழுவதன்று. ஆனால் அதைக் கண்டுகொள்வதற்கோ நிரம்பவும் உழைக்கவேண்டும். இவ்வுடம்புச் சாமியை எத்தனையோ பிறவிகளில் கும்பிட்டு வந்திருக்கிறீராதலால் மெய்ம்மைக் கடவுளது வழிபாட்டைத் திடீரென்று தொடங்கிடமுடியாது. ஏனெனில் உள்ளத்தை ஒடுக்குவதினும் உலகனைத்தையும் வென்று ஒடுக்குவது மிக்க எளிதாகும். அதனாலேயே பல நாடுகளையும் ஒடுக்கிவிட்ட வீரர்வீரனாகிய அருச்சுனனும் தனதுள்ளத்தை அடக்கமுடியவில்லை யென்று குறையிரக்க வேண்டியதாயிற்று. அருச்சுனனோ மகாவீரன், அதில் ஐயமேயில்லை; ஆயினும் அவன் இந்தப் புலத்திலே ஒருபோதும் பாடுபட்டதில்லையாதலால் தனது வலியின்மையை யுணர்ந்து வருந்தினான். நாமும் அருச்சுனனைப் போன்றிருக்கிறோம். இந்தப் பிறவியிலேயே என்று மழியாப் பெருவாழ்வையுற்று இன்

பந் துய்ப்பதற்கு இந்த நெறியொன்றையே கடைப்பிடிக்க வேண்டும். "முத்தியை யடைவிக்கும் நெறி பிறிதொன்று மில்லை."

ஆகவே உம்மை யாவரினுமிக்க இன்பமும் பொருளுஞ் பலமும் படைத்தவராக்கக்கூடிய நெறியொன்று முன்னரே காணப்பெற்றிருக்கிறதென்று அறியலாகும். இனி வேண்டியதென்ன? திடசித்தமே. வழியை யறிந்தும் அவ்வழிச் செல்லத் திடசித்தமில்லாவழி அவ்வறிவு பயனற்றதாய் விடும். சுவைமிக்க பண்டமெல்லாம் சமைக்க அறிவீராயினும் சமையலறைக்குள்ளே சென்று அவற்றிற் சில ஆக்கிக் கொள்ளாவிட்டால் உமதறிவு உமக்கு உதவுவதில்லையே. ஆதலால் உய்யுநெறி உம்மகத்தே உண்டு என்ற அறிவு மாத்திரம் உம்மை ஈடேற்றிடாது. அரும்பாடு பட்டு அங் குறுதல்வேண்டும். ஆதலாற் சமயநெறி யென்பது முற்றிலும் அனுபவ பூர்வமானதொன்றும். வாதம்புரிந்து சித் தாந்தம் நிறுவுதற்கும் சமய நெறிக்கும் உறவேயில்லை. அஃதெல்லாம் அந்நெறி வழியொழுக உமக்குச் சித்தந் திடமுறுமுன்னர் நேரிடலாம். உமதறிவு யாவரறிவினும் மிகச் சுருங்கியதா யிருந்தாலும், கடவுளையடையவேண்டித் தீவிரமான விருப்பங் கொள்வீராயின், எவ்வகைக் கல்வியு மின்றி நீர் உமதகத்தே ஆழ்ந்து அம்மலர்மிசை யிறைவனை யடைதல்கூடும். அந்த நிலையிலே பரமபண்டிதனும் உமதடி சார்ந்து அமருவான். பகவான் ஸ்ரீராமகிருஷ்ண தேவர் கல்வி மணமற்றவர்; எழுதப் படிக்கக்கூட அவ்வளவாய்த் தெரியாதவர். என்றாலும் பெரும் பண்டிதர்களும் அவர் பாற்போந்து தத்தம் ஐயங்களை நீக்கிக்கொள்வது வழக்கம். அவர் கடவுளையடைவதற்கு அதிதீவிரமாய் விழைந்து அவ் விறைவனை அடைந்தும்விட்டார். ஆதலாலே இவ்வளவு

வல்லமை படைத்தவராயினர். ஏட்டுப் படிப்பு அல்லது சோதனைத் தேர்வினால் மட்டும் ஒருவன் அறிவெய்தல் கூடும் என்ற கொள்கையை இராமகிருஷ்ண தேவரது வரலாறு உறுதியாக மறுக்கின்றது. அறிவு இத்தன்மைய தென்றது மிகவும் வெள்ளையான கருத்து. வாழ்நாளெல்லாம் வருந்திக் கற்றாலும் கடைசியில் நீர் அறிந்துகொண்டது ஏதுமேயிராது. சாக்கிரட்டீசு மிக்க அறிவாளி: ஏனென்றால் தானறிந்துகொண்டது ஒன்றுமில்லை யென்று அறிந்திருந்தார்.

அப்படிப்பட்ட ஒருவர் இறைவனைத் தாம் காணுவதல்லாமல் மற்றவரையும் பார்க்கும்படிசெய்ய வல்லுநரா கின்றார். கடவுளைக்கண்டேன் என்று கழறவல்ல ஒருவருண்டா என்று விவேகானந்த சுவாமிகள் தமது இளம் பிராயத்தில் ஓவாது தேடிக்கொண்டிருந்தார்; இல்லையாயின் கடவுளின் உண்மையைத்தான் தெளிவது எங்ஙனம் என்பார். பேர்பெற்ற ஒரு சாதுவைப் பற்றியாவது ஆசிரியரைப் பற்றியாவது கேள்வியுற்றபோதெல்லாம் அன்னவர் மாட்டுச்சென்று கடவுள் உண்டா என்று கேட்பார். அப் பெரியவர் ஆமென்று கூறுதலும், "கடவுளை நீர் கண்டதுண்டா?" என்று வினவுவார். இல்லை யென்று விடைவரலும், அவ்விடம்விட்டு அகன்றிடுவார். கடவுளைக் கண்டேன் என்று கூறினவரெவரையும் எங்குங் காண முடியவில்லையாதலால், கடவுளென்பது ஒரு கற்பனைப் பொருளே யென்ற முடிவுக்கு வந்துவிட்டார். பின்னரொரு நாள் தட்சிணேசுவரத்திலே யிருந்த இந்த ஞானியார் மாட்டு, பள்ளி பயின்றறியாத இப்பேரறிவாளர் மாட்டுப் போந்தார். கடவுளைக் கண்டிருக்கிறீராவென்று அவரையுங் கேட்டார். இராமகிருஷ்ணர் ஆம் என்று உடன் பதிலளித்

தார். “நான் கடவுளைக் காணும்படிசெய்ய உம்மால் முடியுமா?” என, “முடியும்” என்று அடுத்த விடையும் பிறந்தது. கடைசியாக சுவாமிகளது உள்ளம் திருத்தியடைந்தது. அனுபவமடைவதே சமயமாகும் என்று சுவாமிகள் தமது நூல்களிலெல்லாம் திரும்பத் திரும்ப வற்புறுத்துவதற்கு இதுதான் காரணம். மெய்யாகவே சமயமென்பது முற்றிலும் உற்றறியற் பாலதேயாகும்.

நீர் கடவுளைக் கண்டே தீரவேண்டும். ஆனால் அதற்கு அரும்பாடு படவேண்டும். எத்தனையோ பிறவிகளிலே பொய்ம்மைக் கடவுளை வழிபட்டு வந்தமையா லேற்பட்டுள்ள பழைய பழக்கங்களை முதற்கண் வென்றுகொள்ள வேண்டும். உள்ளத்தையும் புலன்களையும் ஒடுக்க வேண்டும். இயேசு நாதரைப்போன்று இவ்வுடம்பையும் இப் புலன்களையும் சிலுவையிலேற்றிச் செற்றாலொழிய, மேலெழும்ப முடியாது; இறந்துவிட்ட இவ்வுடம்பினின்றும் எழும்பிப் போவதற்கு இயலாது. அவ்வாறெழுவதற்கு விழைவீராயின் இந்நாறுடம்பைச் சிலுவையிற் கொன்று புன் புலன்களை வெல்ல வேண்டும். இதை ஒவ்வொருவரும் செய்து தீரவேண்டும். இவ்வருஞ் செய்கையாற்றுவதற்கு மற்றெவற்றினும் மிக்கவோர் முறையினை இராமகிருஷ்ண தேவர் அருளியிருக்கிறார். அவரருளுவது உமது புலன்களை வெல்ல விரும்புவீராயின் கடவுளே யாவற்றுக்கும் மேம்பட்ட உயர்தனிச் செம்பொருள் என்று மதிக்க வேண்டும் என்பதே. உமக்கு அழகில் விருப்பமிருந்தால், கடவுளின் கண்ணுள்ள பேரழகைப் போன்றது வேறெங்குக் காணுவீர்? வாக்கு வன்மையில் உமக்கு விருப்பமுண்டென்றால், மறைகளெல்லாவற்றையுந் திருவாய் மலர்ந்தருளிய எம்பெருமானின் மிக்க வன்மை

பெற்றவரு முண்டோ? வல்லமையை விழைவீராயின், கடவுளின் மிக்க வல்லமை வாய்ந்த பொருளும் உண்டு கொல்? ஒவ்வொருவருக்கும் இவைகளி லொன்றிலேனும் விருப்பம் இருந்தே தீரும். இவை யெல்லாமும் இறைவன் மாட்டு எல்லையற்ற அளவுக்குக் காணலாகும். அழகிய பெண்ணொருத்தியை விரும்பி யிருப்பீராயின், அவளழகு நிலைப்பது கொஞ்ச காலத்துக்கேயாம்; கடவுளழகோ என்று முளதாவது. ஆகையால் என்று மழியாத பேரழகும், என்று முலவாப் பெருவாழ்வும், ஆற்றலனைத்தும், அறிவெல்லாமும் உமக்கு வேண்டுமாயின், இறைவன்பாற் செல்லவேண்டும். அச்செலவிற்கு ஒரு காசுந் தேவையில்லை; உரிமைச்சீட்டொன்றும் வாங்க வேண்டியதில்லை. இறைவன்பாற் போவதற்கு உமது கால்கள் வேண்டாம்; அவரைக் காண்டற்கு உமது கண்கள் வேண்டாம்; அவரைக் கேட்டற்கு உமது காதுகள் வேண்டாம்; அவர் உமதகத்தே வீற்றிருக்கிறார். அவரை யடைவதற்கு இவை யனைத்தும் மேற்செல்லாவகை அடைத்துவிட வேண்டும். அவரைக் காண்பதற்குக் கண்களை மூடவேண்டும்; கேட்பதற்குச் செவிகளை யடைக்க வேண்டும்; அணுகுவதற்குப் புறமுயற்சிகளை ஒழிக்கவேண்டும்.

இந்தக் குறிப்பைப் பிடித்துக் கொண்டு உண்முகமாக உழைத்து இறைவனை யடைமின். அப்பொழுதுதான் உண்மையில் மனிதராவீர். இவ்வருஞ் செயலுக்கு மிக வுறுதியான சித்தம் வேண்டும். இறைவனே உமதுண்மைத் தாயுந் தந்தையுமாவார், அவரே உமது மெய்யன்பனுந் தோழனுமாவார் என்ற இம்மெய்யுறவினை ஒருகால் உணர்ந்து கொண்டு அவரை யணுகுவீராயின் அளவற்ற பரிசு பெறுவீர்; ஏனென்றால் உம்மைப் பேணிப் பாது

காக்கும் பொருட்டு அப்பெருமானே உமது ஊழியக்கார னாக வந்தருளுவார். ஆகையாலே கழிபேரின்பமும் கழி பேரறிவும் கடவுளொருவரே தந்தருள மாட்டுவாராத லின், உமக்குப் பயித்திய மில்லாவிட்டால், மற்றெல்லாமும் விட்டொழித்து அவரையே விரும்பி நாடுவீர்.

மதராஸ் லா ஜர்னல் பிரஸ், மயிலாப்பூர்.

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

அவதார புருஷர்களான ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம் ஸர், ஸ்வாமி விவேகானந்தர் இவர்களின் அரிய உபதேசங் களையும், நாட்டின் முன்னேற்றத்திற்கான பல கட்டுரைகளை யுங்கொண்டு வெளிவரும் ஒரு மாதாந்தத் தமிழ்ப் பத் திரிகை.

**வருட சந்தா உள்நாடு ரூ. 3-0-0 வேளி நாடு ரூ. 4-0-**

**ஸ்ரீராமகிருஷ்ண விஜயத்தின் பழைய தொகுதிகள் மிக சரஸமான விலைக்குத் தரப்படும். உடனே எழுதுங்கள்**

## பக்தி புகட்டும் நூல்கள்

| | | ரூ | அ | பை |
|---|---|---|---|---|
| ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவரின் 1003 உப தேச மொழிகள் சாதா பைண்டு | ... | 1 | 6 | |
| ,, காலிகோ பைண்டு | ... | 1 | 12 | |
| எனது போர்முறை | ... | 0 | 3 | |
| சிகாகோ பிரசங்கம் | ... | 0 | 5 | |
| விஜயம் சந்தாதாரருக்கு ... 0 4 0 | | | | |
| பக்தியோகம் | ... | 0 | 10 | |
| விஜயம் சந்தாதாரருக்கு ... 0 8 0 | | | | |
| கர்மயோகம் | ... | 0 | 12 | |
| விஜயம் சந்தாதாரருக்கு ... 0 10 0 | | | | |
| விவேகானந்தர் கடிதங்கள் முதற்பாகம் | ... | 0 | 8 | 0 |
| ஜகஜ்ஜீவபர விளக்க வினாவிடை | ... | 0 | 12 | 0 |
| வேதாந்தத்தின் கோட்பாடுகளும் கருத்துக்களும் | ... | 0 | 3 | 0 |
| விஜயம் சந்தாதாரருக்கு ... 0 2 0 | | | | |
| தனக்குத்தானே உதவியும் ஆத்மார்ப்பணமும் | ... | 0 | 1 | 6 |
| விஜயம் சந்தாதாரருக்கு ... 0 1 0 | | | | |
| விவேகானந்த சுவாமிகள் தற்கால இந்தியாவுக்குக் கொண்டுவந்த செய்தி | ... | 0 | 4 | 0 |
| பக்தி மார்க்கம் | ... | 0 | 7 | 0 |
| விஜயம் சந்தாதாரருக்கு ... 0 6 0 | | | | |
| நடராஜ வடிவம்; தில்லைத் திருநடனம் | ... | 0 | 2 | 0 |
| விதிவசம் அல்லது ஊழ்வினை | ... | 0 | 0 | 6 |

# எல்லாவற்றிலும் இறைவனைக் காணல்

ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள்

அருளியது



(ஞானயோகம் என்ற நூலின் ஓர் அத்தியாயம்)

ஸ்ரீராமகிருஷ்ண மடம்,
சென்னை
1929

 [விலை அணா 2

சு. அ. இராமசாமிப் புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

# எல்லாவற்றிலும் இறைவனைக் காண்டல்

**வா**ழ்நாளிற் பெரும்பாகம் துக்கம் செறிந்ததாய்த்தான் இருக்க இயலும் என்பதை நாம் தெரிந்துகொண்டோம். அவைகள், துன்புறுத்தாவண்ணம் எவ்வகையில் தடுக்க முயன்றாலும் வந்தேதீரும் என்பதை நாம் அறிவோம். இம்மட்டோ! அத்துன்பங்கள், அளவுகடந்த பாரமுள்ளன எனவும் நமக்குப் புலப்படுகின்றது. அவைகளை ஒழிக்க நாம் பல காலமாய்ப் போராடி வருகிறோம். இருந்தும் அவை ஒழிந்தபாடில்லை. சில பரிகாரங்களால் அவற்றிற் சிலவற்றைப் போக்கியவுடனே, முன்னினும் கடுந் துன்பங்கள் பல புதிது புதிதாய்த்தோன்றி, நம்மை வருத்தச் சூழ்கின்றன. இது நமது அனுபவமாகும். இறைவன் வழிபாடொன்றே இத்துன்பங்களை ஒழித்தற்கு ஏற்ற வழியென எல்லா மதங்களும் கூறுகின்றன. இவ்வழியிற் செல்லாமல் 'உலகம் எப்படி இருக்கிறதோ அந்தப்படியே அதனை மதித்து நடந்துகொள்க' என்று சில உலகியலறிஞர் கூறுகிறபடி நடப்போமானால், அதனால் நமக்கு விளைவது அத்யந்த துக்கமே தவிர, வேறன்று என எல்லா மதங்களும் கூறுகின்றன. மேலும், அம் மதங்கள் பலவும் இவ்வுலகத்திற்

கப்பால் ஏதோ ஒன்றுளது என்று உறுதிப்படுத்து கின்றன. நாம் பார்க்கும் இந்த உலகம்—ஐம்புலன்களால் கவரப்பட்ட இந்த உலகம்—அதன் சிறியதொரு பாகமேயாகும். இவ்வுலகம், அதன் மேற்பரப்பில் காணப்படும் காட்சியேயாம். மேற்பரப்பை யகற்றிச் சிறிது ஆழ நோக்கின், (காணப்படும்) இவ்வுலகத்திற்கு எட்டாததும் வேறானதும் அளவு கடந்ததுமான பொருளொன்று உண்டு என்பது புலப்படும். அது, துன்ப மற்றதாய் இன்ப வடிவினதாய்த் திகழும் பான்மையது. அத்தகைய பொருளை, சிலர் சிவனென்றும், வேறு சிலர் திருமாலென்றும், சிலர் அல்லா என்றும், சிலர் யாகோப் என்றும், சிலர் யோவான் என்றும் வெவ்வேறு பெயரிட்டு அழைக்கின்றனர். அதனையே பிரம்மம் என்று வேதாந்தி பகர்கின்றான்.

இப்படி மதங்கள் கூறுவதிலிருந்து நமக்கு முதலில் தோன்றுவது நமது வாழ்க்கையைத் துறந்துவிட வேண்டுமென்பதேயாகும். உலகவாழ்க்கையில் செறிந்துள்ள துன்பங்கள் என்னும் நோயைத் தீர்க்கும் மருந்து என்ன என்னும் கேள்விக்கு "இவ்வாழ்வையே விட்டுவிடு" என்னும் விடையை, எல்லா மதங்களும் அளிப்பதுபோலக் காணப்படுகின்றது. இந்த போதனையின் இயல்பை விளக்கும் ஒரு கதை என் ஞாபகத்திற்கு வருகின்றது. கொசுவொன்று ஒருவன் தலைமேல் உட்கார்ந்தது; அதனைக் கொல்ல எண்ணி அவன் தோழனொருவன் ஓங்கி ஓர் அடி அடித்தான். அந்த அடி, கொசுவோடு அந்தத்தோழனையும் கொன்றுவிட்டது. மதங்கள் கூறும் உபாயமும் இதை ஒப்பதே.

உயிர் வாழ்க்கை, துன்பம் நிறைந்ததெனவும், உலகம் துன்பமயமெனவும் சிறிது உலகானுபவமுள்ளவனும் ஒப்புக்கொள்ளுவான்.

பின்னை, இத்துன்பநோய்க்கு மதங்கள் கூறும் அவிழ்தம்தான் என்னை? 'இந்த உலகம் ஒரு பொருட்படத்தக்கதன்று; உலகம் அநித்யம். இந்த உலகத்திற்கப்பால் ஒரு பொருளுளது; அதுவே நித்தியம்!' என்று எல்லாமதங்களும் கூறுகின்றன. 'எல்லாவற்றையும் துறந்துவிடு; இதுவே துக்கநிவர்த்திக்குரிய வழியாகும்' என்பதே மதங்களின் கருத்தாகும். இது, நமக்கு சம்மதத்தைத் தருவதில்லை. மிக்க மனக்கஷ்டத்தை விளைவிக்கின்றது. உபாயம், எல்லாவற்றையும் அழிக்கும் அபாயமாகின்றது. இது எங்ஙனம் மருந்தாகும்? "துன்பநிவர்த்திக்கு வேறு வழியில்லையா?" என்று மனிதன் ஆராய்கிறான். வேதாந்த நூல்கள் என்ன கூறுகின்றன வென்றால் "மதங்கள் கூறுவதில் சிறு தவறுமில்லை. பின்னை, அம்மதங்கள் கூறுவதின் கருத்தைத் திருத்தமாக ஆராய்ந் துணராமையாலேயே தவறு நேருகின்றது. அநேகசமயங்களில் மதங்களின் கருத்து விபரீதமாகவே கொள்ளப்படுகின்றது. ஏனெனில், அவைகள் தத்தம் கருத்தை யாவரும் எளிதில் உணரும்படி வெளிப்படையாகக் கூறுவதில்லை. அதனாலேயே மதங்களைப்பற்றி மக்கள் தவறான எண்ணங்களைக் கொள்ளலாயினர் என்பதாம். நமக்கு உண்மையில் வேண்டுவன புத்தி அன்பு ஆகிய இவ்விரண்டும் கலந்ததேயாம். அன்பு, மிகச் சிறந்ததென்பது உண்மையே. அதன்மூலமாகவே அருட்செல்வம் வந்தணு

கும்; செயற்கரிய செயல்களைச் செய்தற்குரிய ஆர்வமும் வந்தடையும். அன்பு சிறிதுமில்லாத புத்தி நுட்பத்தை அடைய நான் சிறிதும் விரும்பேன். நுண்ணறிவு சிறிதுமில்லாமற்போனாலும் அன்பு மட்டில் சிறிதளவாவது என்னிடம் நிலைத்திருக்குமானால் அதுவே மிக்க சந்தோஷத்தைக் கொடுக்கும். அன்புள்ள ஒருவன்தான் இன்பத்தோடு வாழவல்லனவான். அவனே முன்னேற்றத்திற்குத் தகுதியுடையவனவான். அன்பு இல்லாமல் புத்தி கூர்மையை மாத்திரம் ஒருவன் உடையனாயின் அவன், வன்பாற்கண் வற்றல் மரம் தளிர்ப்பதை ஒப்பான்.

மேலும், அன்புவயப்பட்ட ஒருவன், நுண்ணறிவு இல்லாதவனாயின், பல துன்பங்களை யனுபவிப்பதை நாம் கண்டிருக்கிறோம். ஏனெனில், அவன் அடிக்கடி பல இன்னல்களுக் காளாகிறான். ஆகையினால் அன்பு, புத்தி ஆகிய இரண்டும் கலந்தது எதுவோ, அதுவே நமக்குவேண்டும். நான் இப்படிச் சொல்லும் போது, ஒருவன் தன்னிடமுள்ள புத்தியின் நிமித்தம் அன்பிற்கோ, அன்பின் நிமித்தம் புத்திக்கோ ஒரு எல்லை ஏற்படுத்த வேண்டுமென்று கூறுவதாகக் கொள்ளக் கூடாது. பின்னை ஒவ்வொருவரிடத்தும் அனுதாபம் (அன்பு எல்லை யற்றிருத்தல்) நிலைத்திருக்கட்டும்; அதனோடு அளவிடற்கரிய நுண்ணறிவும் கூடியிருக்கட்டும் என்பதே என்னுடைய கருத்து.

இவ்வுலகத்தில் நாம் விரும்பும் பொருள்களுக்கு எல்லையுண்டா? இதற்கேற்றபடி உலகமும் எல்லைகடந்ததாக இல்லையா? எனவே, அளவில்லா அன்புக்கு இவ்

வுலகம் இடம்கொடாதோ? அவ்விதமே அளவில்லா விவேகத்திற்கும் இவ்வுலகம் இடம்தராதா? அவை யிரண்டும் அளவுகடந்து இவ்வுலகில் உலாவட்டும்; நிகழட்டும். இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று சமமாக எப்பொழுதும் நிலையாக வளர்ந்துகொண்டே போகட் டும்.

அன்பும், விவேகமும் எல்லையற் றிருக்கவேண்டு மென்பது எல்லாமதங்களுக்கும் தெரிந்த விஷயமே. இருந்தும், அவைகள் எல்லாம் உள்ள நெகிழ்ச்சி ஒன் றாலேயே மூழ்கடிக்கப் பட்டுவிடும் தவறை இழைத் தவைகளாகின்றன. "பிரபஞ்சத்தில் தீமை நிலவுகின் றது; ஆகையால் பிரபஞ்சத்தைத் துறந்துவிடு" என்பது உண்மையும் பெருமையும் வாய்ந்த உப தேசமே. இதுவே சிறந்தபோதனை என்பதில் ஐய மில்லை. உலகப்பற்றை விடவேண்டியதுதான். உண் மையைக் கடைப்பிடிக்கப் பொய்யை விடவேண்டும் என் பதைப்பற்றி அபிப்பிராயபேதம் இருக்கமுடியாது. அவ் வண்ணமே, நன்மையைவிழைவோன் தீமையை விட வேண்டும் என்பதைப் பற்றியும் அபிப்பிராயபேதம் சிறிதும் இருக்கமுடியாது. அழிவிலாமையை விரும் பும் ஒவ்வொருவரும் மரணத்தை விட வேண்டுமென் பதைப் பற்றியும் அபிப்பிராய பேதம் இருக்கமுடியாது.

வாழ்வு என்று நாம் கருதுகிற ஐம்புல வாழ்க் கையை விட்டுவிடவேண்டுமென்பது உட்கருத்தாயின், 'எஞ்சியிருப்பது யாது? இதைத் தவிர, வேறெதை நாம் வாழ்வென்று உணர்கிறோம்? இதை விட்டால் பின் நாம் விடாது வைத்திருப்பதற்கு என்ன இருக்

கிறது' என்னும் திகைப்பு உண்டாகின்றது. மேலே நாம் கூறப்போகும் வேதாந்த நூல்களின் உண்மைகளிலிருந்து இதற்குச் சமாதானம் வெளியாகும். வேதாந்தமொன்றே மேற்கூறிய வினாக்களுக்குத் தக்க விடை அளிக்கின்றது. இப்பிரசங்கத்தில், வேதாந்தம் எதைக் கற்பிக்க முன்வந்தது என்பதை மாத்திரம் இப்பொழுது எடுத்துக் காட்ட முடியும். அது "உலகை, பிரம்மமாகப் பாவித்து இறைஞ்சு" என்பதேயாம்.

உண்மையில், வேதாந்தம் இவ்வுலகை இழிவுபடுத்திக் கண்டிக்கவில்லை. வேதாந்தத்தில் துறவின் இலக்ஷியம் முதிர்ச்சிபெற்று மிக உயர்நிலையில் நிற்றல்போல் வேறெம் மதத்திலாயினும் சாஸ்திரங்களிலாகிலும் நிற்கக் காணலரிது. ஆயினும், தற்கொலைபோன்ற துறவை மேற்கொள்ளும் ஈரமற்ற போதனை யளிப்பது இதன் கருத்தன்று. பின்னை "குற்றமுள்ளதாகக் காணும் இவ்வுலகத்தை—அஃதாவது, இவ்வுலகத்தைப் பற்றி நாம் கொண்டிருக்கும் கருத்து எதுவோ, அதைப் பற்றிய நம்முடைய ஞானம் எதுவோ, அஃது எப்படி நமக்குத்தோற்றுகிறதோ, ஆகியவைகளை—விடுத்து அதனது உண்மை வடிவை உற்றுணர்ந்து, பிரம்மமாகப் பாவித்து இறைஞ்சு" என்று வேதாந்தம் போதிக்கிறது. உண்மையில் வேதாந்தம் கூறும் மார்க்கம் இதுவே. "பிரபஞ்சம் பிரம்மமயம் என்று பாவித்து அதனை இறைஞ்சு. இப்பிரபஞ்சத்தில் என்னென்ன இருக்கின்றனவோ அவைகளெல்லாவற்றையும் இறைவனாகவே கருதவேண்டும்" என்று பழமை வாய்ந்த உபநிஷத்துக்கள் ஒன்றின் துவக்கத்தில் வாசிக்கிறோம்.

அனைத்தையும் பிரம்மமாகப் பார்த்தல் என்பது, எல்லாம் நன்மைக்கே உளவாகின்றன என்று எண்ணிக் கொண்டுவிடும் போலிபாவனையைக் கொள்வதன்று ; உலகத்தில் துக்க மிருக்கக்கண்டும் அதனைக் காணாதது போல் இருந்துவிடுவது மன்று. பின்னை உண்மையாக எல்லாவற்றிலும் ஈசுவரனைக் காணுவதேயாம். இப் படித்தான் உலகத்தைத் துறக்கவேண்டும். இவ்விதம் துறந்தபிறகு மிருந்திருப்பது என்ன? ஈசுவரனே. இந்த உபதேசத்தின் கருத்து என்ன? உன் மனைவியை விட்டு ஓடிப்போ என்பது அன்று; நீ உன் மனைவியோ டிருக்கலாம் ; அவளிடத்திலும் ஈசுவரனைத் தரிசிக்க வேண்டுமென்பதுதான் கருத்து. உனது குழந்தை களைத் துறந்துவிடு—இதன் கருத்தென்ன? எல்லாத் தேசங்களிலும் மிருகசுபாவமுள்ள சில மாந்தர் செய் கிற மாதிரி குழந்தைகளை வீட்டைவிட்டுத் துரத்திவிடு என்பதா? அல்லவே அல்ல. அப்படித் துரத்திவிடு வது பேய்ச் செயலாகும் ; மதமாகாது. பின்னை உன் குழந்தைகளிடத்து இறைவனைக்காண் என்பதுதான் இதன் கருத்து. இவ்விதமே எல்லாவற்றிலும் ஈசு வரனைக் காண்க; உயிரினிடத்தும், மரணத்தினிடத் தும், துக்கத்தினிடத்தும், இன்பத்தினிடத்தும் இறைவன் யாதொரு வேறுபாடுமின்றி உறைகின்றார். உலகெங்கும் இறைவன் நிறைந்துள்ளார். உன் கண் களைத் திறந்து அவரைப்பார். இதைத்தான் வேதாந் தம் போதிக்கின்றது. உன் யூகத்தினால் விளைந்த உலகத்தை விட்டொழி ; ஏனெனில், உன் யூகம் முழு அனுபவத்தை ஆதாரமாக உடையதன்று; அற்ப யுக்தி

யினால் உண்டாயது; உனது குற்றமுள்ள குணங்களால் விளைவிக்கப்பட்டது. இப்படிப்பட்ட உலகத்தைத் துறந்துவிடு. இவ்வளவு காலமாக நாம் கருதிவந்த இந்த உலகம்—இவ்வளவு காலமாக நாம் இடைவிடாது பற்று வைத்திருந்த இந்த உலகம்—நம்மால் படைக்கப் பட்ட பொய் உலகமாகும். அதை விட்டு விடு. கண்ணைத் திறந்து பார். இத்தகைய உலகம் எக்காலமும் இருந்ததேயில்லை யென்பதை உணர். அது ஒரு கனவு; மாயை. உண்மையில், இருப்பவன் இறைவனே. குழந்தையில் இருப்பவர் அவரே; மனைவியினிடம் இருப்பவர் அவரே; கணவனிடத்து இருப்பவரும் அவரே. நன்மை தீமை இரண்டிலும் இருப்பவர் அவரே. பாவத்திலும் பாவியினிடமும் இருப்பவர் அவரே. உயிரினிடமும் மரணத்தினிடமும் இருப் பவர் அவரே.

இவ் வாக்கு நம்மைத் திடுக்கிடவே செய்கிறது! எனினும், இவ்விஷயத்தைப் பிரமாணத்தோடு மெய்ப் பிப்பதற்கும், போதிப்பதற்கும், பிரசாரம் செய்வதற் கும் வேதாந்தம் முன்வந்துளது. இந்த விஷயத்தைக் கொண்டே வேதாந்த சாஸ்திரம் ஆரம்பிக்கின்றது.

இவ்வண்ணம் உயிர்வாழ்க்கையில் செறிந்துள்ள அபாயங்களையும் தீமைகளையும் போக்கிக்கொள்ளவேண் டும். ஒன்றினிடமும் ஆசை வையாதே. நமக்குத் துக் கத்தை விளைவிப்பது எது? நம்மைப் பீடிக்கும் துன் பங்கள் எல்லாவற்றிற்கும் காரணமாயிருப்பது ஆசை யேயாம். நீ ஏதோ ஒன்றை அடைய ஆசை கொள் கிறாய். அந்த ஆசை பூர்த்திபெறாதபோது துயரம்

விளைகின்றது. ஆசையேயில்லையாயின் துயரமும் இல்லை. இப்படி நான் சொல்லும்போதுகூட என் கருத்தை நீங்கள் மாறுபாடாகக் கொள்ளக் கூடிய ஆபத்துண்டு. ஆகையினால் உங்கள்ஆசையை ஒழித்து எல்லாத்துன்பங்களினின்றும் விடுபடுங்கள் என்று நான் சொல்லும் பொழுது, என் கருத்து என்னவென்பதை உங்களுக்கு விளக்கிச் சொல்ல நேரிடுகின்றது. சுவர்களுக்கு ஆசையே கிடையாது; அதனால் அவைகள் ஒருபொழுதும் துன்பப்படுவதுமில்லை. இது உண்மை தான்; ஆனால் அவைகள் கொஞ்சமும் முன்னேற்றமடைவதே யில்லை; எப்பொழுதும் சுவர்களாகவே இருக்கின்றன.

இந்த நாற்காலிக்கு ஒரு ஆசையும் கிடையாது; ஒரு பொழுதும் துன்பப்படுவதுமில்லை; ஆனால் நாற்காலி நாற்காலியாகவே எக்காலமும் இருக்கும். சுகத்தில் ஒரு சிறப்புண்டு; அவ்வண்ணமே துக்கத்திலும் ஒரு சிறப்புண்டு. துன்பத்தினால் பயன் உண்டு எனவும் நான் கூறத்துணிவேன். துன்பம் நமக்குப் புகட்டும் நீதி இன்னதென்பதை நாம் எல்லாரும் அறிவோம். நாம் நமது வாழ்நாளில் நூற்றுக்கணக்கான தீயகாரியங்களைச் செய்துள்ளோம். நாம் ஏன் அவைகளைச்செய்தோம் என்று துக்கிப்பதுண்டு. இருந்தாலும் அவைகள் நமக்கு நல்ல புத்திபுகட்டின என்பதை நாம் அறிந்துள்ளோம். என்னைப்பற்றி நான் சிந்தித்துப் பார்ப்பேனாயின் நன்மைகள் கொஞ்சமும் தீமைகள் பலவும் நான் செய்திருப்பதாக எனக்குப் புலப்படுகின்றன. இவ்விரண்டிற்கும் நான் சந்தோஷமே படுகிறேன்.

நான் சில சரியான காரியங்களைச் செய்திருக்கிறேன்
என்பதற்குச் சந்தோஷப்படுகிறேன்; பலசமயங்களில்
தவறிழைத் திருப்பதற்கும் சந்தோஷப் படுகிறேன்.
ஏனெனில் இவைகளில் ஒவ்வொன்றும் எனக்குப்
படிப்பினையாக இருந்திருக்கின்றன. இப்பொழுது
உள்ள இந்த நான், இதுவரை யான் செய்த கன்மத்
தொகுதியின் காரிய வடிவாகும். நான் எண்ணின
ஒவ்வொரு எண்ணமும் நான் செய்த ஒவ்வொரு வினை
யும் தத்தம் பயனை என்னில் விளைவித்திருக்கின்றன.
இப்பயன்களின் திரட்சியே நானடைந்து வந்த முன்
னேற்ற மெனலாகும்.

ஆசை அடாதது என்பதை நாம் அனைவரும் அறிந்
துளோம். ஆசைகளைவிட்டுவிடு என்பதன் கருத்
தென்ன? ஆசையின்றி உலகவாழ்வு எங்ஙனம் நடை
பெறும்? "ஆசையைவிட்டுவிடு" என்னும் போதனை,
ஆசையுடன் மனிதனும் அடியோடே அழிந்துபோகும்
தற்கொலையான புத்திமதியன்றோ? பின் இத்துன்பத்
தைப் போக்குவதற்கு வழி யாது? ஆசையை விட்டு
விடு என்னும் பொழுது, அதன் கருத்து "நீ பொரு
ளொன்றும் வைத்துக்கொள்ளக் கூடாது" என்பதன்று;
உனக்கு அவசியமான பொருள்களை நீ வைத்திருத்தல்
கூடாதென்பதுமன்று; பெருமித வாழ்வுக்குரிய பொ
ருள்கள் என்று கருதுவனவற்றை வைத்திருத்தல் ஆகா
தென்பதுமன்று. உனக்கு எவ்வளவு தேவையோ அவ்
வளவும் அதற்கு மேலும் நீ வைத்துக்கொள். அதற்கு
ஒரு தடையுமில்லை; ஆனால் அவைகளின் இயல்பை
மட்டில் ஓர்ந்துணர். உண்மையை அறிந்துகொள்.

செல்வம் எவருக்குமே சொந்தமாகாது. 'நானே உரிய வன்; அது எனக்கே உரியது' என்னும் எண்ணத்தைக் கொள்ளாதே. நீயும் நானும் வேறு யாராயினும் ஒரு துரும்புக்கும் ஒப்பாகோம். எல்லாம் இறைவன் உடைமையே. ஏனெனில் எல்லாப் பொருளிலும் இறைவனைக் காணும்படி முதல் சுலோகம் கூறியுள்ள தல்லவா? நீ அனுபவிக்கும் செல்வத்தில் ஈசுவரன் இருக்கிறார்; உன்மனத்தில் எழும் ஆசையில் அவர் குடிகொண்டிருக்கிறார். நீ உனது ஆசை முற்றுப் பெறுவதற்கு வாங்கும் பொருள்களில் அவர் வீற்றிருக்கின்றார். உனது அழகிய உடைகளில் அமர்ந்திருக்கின்றார். உனது சுந்தரமான ஆபரணங்களில் வியாபித்திருக்கிறார். இப்படித் தான் சிந்தைசெய்யவேண்டும். இந்தப் பாவனையுடன் நீ எல்லாப் பொருள்களையும் பார்க்க ஆரம்பித்தாயானால், அவை எல்லாம் உருமாறி வேறு விதமாக உன் கண்ணுக்குத்தோன்றும். உன் சம்பாஷணையில்,—உன் உருவத்தில்,—உனது நடமாட்டத்தில்,—பிறவற்றிலும் கடவுள் வீற்றிருப்பதை நீ உணர்வாயானால் துன்பமும் துக்கமும் செறிந்திருந்த இந்த உலகம் சொர்க்கமாக மாறிவிடும்.

"சுவர்க்க இராச்சியம் உன்னுள்ளிருக்கிறது" என்று கூறினார் ஏசுநாதர். இவ்வண்ணமே வேதாந்தமும் கூறுகின்றது. உயர்தர போதகாசிரியர் அனைவரும் இவ்வண்ணமே கூறியுள்ளார். "பார்க்கக் கண்ணுள்ளவன் பார்க்கட்டும்; கேட்கக் காதுள்ளவன் கேட்கட்டும்" என்று கூறியுள்ளார் ஒரு மகான். "நாம் இதுகாறும் தேடி வந்த உண்மைப் பொருள் நம்

முள்ளே இருக்கின்றது; இதுகாறும் நம்மிடமே அக லாது இருந்துவந்திருக்கின்றது" என்று வேதாந்தம் மெய்ப்பிக்கின்றது. அது நமது இருதயத்தில் இடை விடாது எப்பொழுதுமே குடி கொண்டிருக்க, நமது அஞ்ஞானத்தால் அதனை இழந்துவிட்டோம் என்று எண்ணி, அழுது புலம்பி அதனைக் கண்டுபிடிக்க உல கத்தில் இங்கும் அங்கும் மிகமுயன்று வருந்தி அலைந்து திரிகிறோம். உண்மைப்பொருள் நமது இதயத்திலே தான் இருக்கின்றது. அங்கேதான் அதனை நாம் காண இயலும்.

'உலகத்தைத் துறந்துவிடு' என்பதைப் பழங் காலத்து அர்த்தத்தில் கொள்வோமானல், அது நம்மை அதோகதியில் கொண்டுபோய்ச் சேர்க்கும். சாதாரண மாய் வழங்கிவரும் பழைய அர்த்தத்தின்படி நோக்கி ஞல், நாம் ஒரு எண்ணமும் எண்ணக் கூடாது; ஒரு காரியமும் செய்தல் கூடாது. மண்ணங்கட்டிபோல் அசைவற்றுச் சோம்பலாய் உட்கார்ந்து பொழுது போக்கவேண்டும். ஓரிடத்திலிருந்து பிரிதோரிடத்திற் குக் கர்மகதியால் தள்ளப்படும்போது மாத்திரம் அசைந்து சென்று, மற்றக் காலங்களில் எல்லாம் ஊழின் பயன்என்னும் கொள்கை வயப்பட்டு ஆண்மையிழந்து உயிர்வாழ்ந்து வரல்வேண்டும் என்று ஏற்படுகின்றது. ஆனல், உலகத்தை விட்டுவிடு என்னும் போதனைக்குச் 'செயலற்று இரு' என்பது பொருளாகாது. பின்னை நாம் கர்மம் செய்யவேண்டும். அப்படிச்செய்யும் பொழுது அதன் தன்மையைக் கண்டறிந்து செய்யவேண்டும்; பொய்யான ஆசை வயப்பட்டுத் திரியும் பாமரஜனங்

களுக்குக் கர்மத்தின் இயல்பு என்னதெரியும்? புலன் களாலும் இச்சையினாலும் இழுக்கப்படும் மனிதனுக்குக் கர்மத்தைப்பற்றி என்ன தெரியும்? ஆசைக் கயிற்றால் இழுக்கப்படாமல், சுயநலம் சிறிதுமின்றி வினையைச் செய்யவல்லவன் எவனோ, அவனே கர்ம இயல்பை அறிந்து கர்மம் செய்பவனாவான். சுயநல உட்கருத்து ஏதுமின்றிச் செய்பவனே கர்மத்தைத் தெரிந்து செய்பவனாவான். பயனையும் பெறவிரும்பாமல் கர்மம் செய்பவனே தெரிந்து செய்பவனாவான்.

ஒரு சித்திரப் படத்தைக்கண்டு ஆனந்தமடைபவன் யார்? படத்தைவிற்பவனா? அதனைப் பார்க்க வந்தவனா? படத்தைவிற்பவன் கணக்குப் பார்ப்பதிலும் இலாபம் எவ்வளவு கிடைக்கவேண்டும் என்று யோசித்தலிலும், இன்ன விலைக்கு விற்றால் படம் ஒன்றுக்கு என்ன இலாபம் கிடைக்கும் என்று கணித்தலிலுமே ஆழ்ந்த சிந்தையுள்ளவனாயிருப்பான். இவ்வித எண்ணங்களைத் தவிர, வேறு எண்ணங்களுக்கு அவன் புத்தி இடம் கொடாது. விலைகூறுவதையும், விலை கேட்கிறவர்கள் எவ்வளவுக்கு விலையை உயர்த்துகிறார்கள் என்பதையும் அவன் முழுகவனத்துடன் பார்த்துக் கொண்டிருப்பான். இதுவே அவன் வேலையாயிருக்கும். வாங்கவாவது விற்கவாவது எண்ணமில்லாமல் அங்குப் போயிருக்கும் மனிதன் ஒருவனே அந்தப் படத்தைப் பார்த்து ஆனந்தித்துக் கொண்டிருப்பான். அவன்தான் அந்தப் படத்தைப்பார்த்து இன்புற்றிருப்பான். அதுபோல இந்தப் பிரபஞ்சம் ஒரு படம். இந்த ஆசைகள் ஒழிந்த பிறகே மனிதர்கள் அதனை அனுபவித்து இன்புற்றிருக்க

இயலும். அப்பொழுது வாங்குதல், விற்றல், சொத்து சம்பாதிக்க வேண்டும் என்னும் மூட எண்ணங்கள் ஆகிய இவைகள் ஒழிந்துபோம். வட்டிக்குப் பணம் கொடுப்பவனும் ஒழிந்து போய்விடுவான்; வாங்குபவனும் ஒழிந்து போய்விடுவான்; விற்பவனும் ஒழிந்து போவான்; இவ்வுலகம் ஒரு அழகான சித்திரப் படம் போல் விளங்கி நிற்கும். "ஈசுவரன் ஓர் ஒப்பற்ற கவிவாணன்; அவன் புராண பாவலன்; அளவு கடந்த ஆனந்தநிலையில் அவனால் இயற்றப்பட்ட சிறுபாக்கள், செய்யுள்கள், தாள ஸ்வர நயங்கள் நிரம்பியுள்ள ஆனந்த ரூப காவியமாகும் இந்த உலகம்" என்று இவ்வளவு அழகாகக் கடவுள் பாவனையை வர்ணித்திருப்பது போல் வேறெங்கும் நான் வாசித்ததில்லை. எப்பொழுது ஆசைகளை விட்டொழிப்போமோ அப்பொழுதுதான் கடவுள் மயமான இப்பிரபஞ்சத்தைப் படித்துணர்ந்து ஆனந்தமடைய இயலும். அப்பொழுது எல்லாம் ஈசுவர மயமாகக்கண்டு இறைஞ்சி நிற்போம். நாம் இதுகாறும் இருள் நிறைந்ததாயும் அபரிசுத்தமாகவும் நினைத்து வந்த சந்துபொந்துக்களும் மூலைமுடுக்குகளும் ஈசுவர மயமாய் இருக்கக் காண்போம். அவைகள் தங்கள் உண்மை இயல்பை வெளிக்காட்டி நிற்கும்பொழுது, நம்மை நாமே பார்த்து நகைத்து, "இத்தனை நாட்களாக நாம் அழுது புலம்பியதெல்லம் குழந்தை விளையாட்டே; நாம் பக்கத்திலிருந்து சாக்ஷிமாத்திரமாய்த் தான் இவற்றை யெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தோம்" என்று எண்ணுவோம்.

ஆகையால், 'உன் வேலையைச் செய்' என்று வேதாந்தம் கூறுகிறது. அப்படிக் கூறும்பொழுது வேலைசெய்கிற வகையை நமக்கு முதலில் போதிக்கிறது. அஃதாவது "உலக நிலையாமையை உணர்ந்து அதனது வெளித் தோற்றத்தில் பற்றுவையாது உன் வேலையைச் செய்" என்று வேதாந்தம் புத்தி புகட்டுகின்றது. இப்படிச் சொல்வதின் கருத்தென்ன? ஈஸ்வரனை எங்கும் காண்டலேயாம். இவ்விதம் கண்டு உன் வேலையைச் செய்வாயாக.

வேண்டுமென்றால் நூறு வருடம் உயிருடனிருக்க இச்சைகொள்; உனக்கு விருப்பமிருக்குமாயின் உலக ஆசைகள் அனைத்தையும் வைத்துக்கொள்; ஆனால் அவைகளனைத்தையும் ஈசுவர மயமாகக் கருது; அவைகளனைத்தையும் சுவர்க்கமாக மாற்றிக்கொள்— பிறர்க்கு உதவி புரியவும், எப்பொழுதும் பயன் கருதாக் கர்மத்தில் ஆழ்ந்து ஆனந்தம் எய்துவதற்கும் நெடுநாள் வாழ்ந்திருக்க நீ ஆசை கொள். இவ்வண்ணம் கர்மம் செய்து வருவாயாயின் கர்ம சக்கரத்தினின்றும் நீங்கும்வழி உனக்குப் புலப்படும். வேறு உபாயம் இல்லை. உண்மையைத் தெரிந்து கொள்ளாமல் ஒரு மனிதன் அறிவின்மையால் உலகபோகங்களிற் கண்மூடி மூழ்கிவிடுவானானால் அவன் வழி தவறிக் கிடப்பவனாவானே யன்றி, தான் விரும்பிய இடத்திற்குச் செல்லான்; மோக்ஷமெய்தான். அதுபோலவே, ஒருவன் இந்த உலகத்தை நிந்தித்து, அதை விட்டு அகன்று, காட்டினுட் சென்று தன் உடலை வாட்டி உணவு முதலியவைகளை உண்ணாமல் பட்டினியினால்

மெல்ல மெல்லத் தன் உயிரைப் போக்கிக்கொண்டே எல்லா உணர்ச்சிகளையும் நசிக்கச்செய்து தன் இதயத்தை ஈரமற்ற ஒரு பாலைவனம்போலாக்கிக் கொள்வானாயின், அவனும் வழிதப்பினவனேயாவான். எல்லை கடந்த இவ்விருவகையினரும் பெரும் பிழை செய்பவரேயாவர்; வழி தப்பியவராவர். இவ்விருவரும் மோக்ஷமாகிய இலக்கை இழந்துவிட்டவராவர்.

"ஆகையால் இறைவனை எல்லாப் பொருளிலும் அமைத்து, அவர் எல்லாவற்றிலும் இருப்பதாக அறிந்து வேலை செய்" என்று வேதாந்தம் போதிக்கின்றது. ஜீவனை தெய்விகமானதாகக் கருதி, இறைவனாகவே பாவித்து, இடைவிடாது வேலை செய்; நாம் செய்ய வேண்டியது இவ்வளவு தான் என்றும் நாம் விரும்பிப் பிரார்த்திக்க வேண்டியது இந்த பாவனையே என்றும் அறிந்து ஓயாது வேலை செய். எல்லாவற்றிலும் கடவுளிருக்கிறார். அவரை வேறெங்கே போய்த் தேடுவது? அவர் ஒவ்வொரு எண்ணத்திலும் ஒவ்வொரு கருமத்திலும் ஒவ்வொரு உணர்ச்சியிலும் முன்னமே வியாபித்திருக்கிறார். இவ்விதம் உணர்ந்து வினையாற்ற வேண்டும். இதுவே தக்க வழி. இதைத் தவிர வேறு வழியில்லை. இவ்விதம் செய்யப்பட்ட கர்ம பலன்கள் நம்மைக் கட்டுப்படுத்த மாட்டா. நாம் படும் துன்பங்களுக்கும் தீமைகளுக்கும் காரணம், நம்முடைய ஆசைகள் அவிவேகத்தால் ஏற்பட்டிருப்பதே என்பதை நாம் முன்னமே தெரிந்து கொண்டோம். இவ்வாசைகள், ஈசுவர பாவனையால் தெய்விகமாக ஆக்கப்பெறின், பரிசுத்த மாக்கப்பெறின், அவை

கள் தீமை பயப்பதில்லை; துக்கம் விளைவிப்பதில்லை. இந்த இரகசியத்தை யறியாதவர், அதனையறியுமட்டும் கொடுமை நிறைந்த துன்ப உலகில் வசித்து வரத்தான் வேண்டும். அளவு கடந்த ஆனந்தமென்னும் சுராங் கம், தங்களிடத்தும் தங்களைச் சுற்றிய எல்லாவிடத் தும் இருந்து வருகின்றதென்பதை அநேகர் அறியார். அதனை அவர்கள் இன்னும் கண்டுபிடிக்கவில்லை. 'கொடுமை நிறைந்த உலகென்பது எது? அஃது அஞ் ஞானமே' என்று வேதாந்தம் கூறுகின்றது.

பேராற்றின் கரையில் உட்கார்ந்து கொண்டிருந் தும் நாம் தாகத்தால் உயிர் விடுகிறோம். உணவுப் பொருள்கள் குவியல் குவியலாக நம் பக்கத்திலிருந்தும் பசிப்பிணியால் மரணமடைகிறோம். நம் கண்ணெதி ரில் ஆனந்தமயமான உலகமிருந்தும் அதனைக் காணு திருக்கின்றோம். ஆனந்தமய உலகத்திலேயே நாம் தங்கியிருந்தும், அதை வேறொன்றாகக் காண்கின்றோம். உலகத்தை ஆனந்தமயம் என்று காட்டவே, மதங்கள் எல்லாம் முன்வந்துள்ளன. இந்த ஆனந்தமய உல கத்தை யடையவேண்டு மென்னும் அவா, எல்லாருள் ளத்து முள்ளது. எல்லாத் தேசத்தினரும் இதனைக் கண்டு பிடிக்க முயன்று வருகின்றனர். இஃது ஒன்றே, எல்லா மதங்களினுடையவும் குறியாக இருந்து வரு கின்றது. இதை, வெவ்வேறு மதங்கள் வெவ்வேறு சொற்களால் விவரித்துள்ளன. மதங்களிற் காணப் படும் மாறுபாடெல்லாம், சொல்லின் வேறுபாட்டைப் பொறுத்தவையே யொழிய உண்மையில் மாறுபட்ட கருத்துடையனவல்ல. ஒரு மதம் ஒருவகையில் விளக்

கிக் கூறும் அதே கருத்தைப் பிற மதம் வேறு விதமாக எடுத்துக் கூறும். வேறு பாடெல்லாம் பாஷையிலேயே தவிர கருத்தில் இல்லை.

இது சம்பந்தமாக வேறு பல ஐயங்கள் உதிக்கின்றன; பேசுவது மிக எளிது. "எல்லாவற்றிலும் எவ்விடத்திலும் இறைவனைக் கண்டால் அப்பொழுது உலகத்தைச் சந்தோஷமாய் அனுபவிக்கலாம்" என்று சொல்லுவதை நான் குழந்தைப் பருவத்திலிருந்தே கேட்டுள்ளேன். ஆனால் உலகத்தோடு சேர்ந்து கொஞ்சம் உறவுகொள்ளத் தொடங்கியவுடனே, என்மேல் வந்து விழுகின்றன,—குத்தும் உதையும்; உடனே நான் எண்ணியிருந்த எண்ணமெல்லாம் பறந்தோடி விடுகின்றன. எல்லாரிடமும் இறைவன் இருக்கிறார் என்று நினைத்துக் கொண்டே, வீதியில் நடந்துகொண்டிருக்கிறேன். அப்பொழுது பலசாலி ஒருவன் அவ்வழியாகவந்து என்னை ஒரு இடி இடித்துத் தள்ள, நான் பாதையில் குப்புறவிழுகிறேன். பின் மிக விரைவில் அவனைக் குத்தக் கையை மடக்கிக்கொண்டு எழுந்திருக்கிறேன். ஏன்? எனக்குக் கோபமுண்டாது; உதிரம் மண்டைக்கேறிற்று; அறிவை இழந்துவிட்டேன். அப்பொழுதே பித்துப் பிடித்தவனானேன்; எல்லாவற்றையும் மறந்தேன். ஈசுவரனைக் காண வேண்டிய விடத்தில் தீமையையே காண்கின்றேன். "எல்லாவற்றிலும் இறைவனைப் பார்" என்று பிறந்தது முதல் நமக்குப் போதிக்கப்பட்டுவருகிறது. 'எல்லாப் பொருள்களிலும், எவ்விடத்திலும் ஈசுவரனைப் பார்' என்ற இதனையே ஒவ்வொரு மதமும் போதிக்கின்

றது. இதனையே கிறிஸ்து புதிய சங்கிதையில் எவ்விதம் கூறியிருக்கிருர் என்பது உங்கள் ஞாபகத்திற்கு வர வில்லையா? நம்மனைவருக்கும் இளமைமுதல் இது உப தேசிக்கப்பட்டே வருகிறது. இருந்தும், நாம் இதன் படி நடக்க முயலும்பொழுது பெருங் கஷ்டங்கள் எதிரே நிற்கின்றன. ஈஸாப் கதைக்கொத்து (AEsop's Fables) என்னும் புத்தகத்தில் 'மான் கதை'யொன்று வருகிறது; அதை நீங்கள் வாசித்திருப்பீர்கள். ஏரிக் கரையில் நின்று கொண்டிருந்த ஒரு மான், தண் ணீரில் தன்னிழலைப்பார்த்துத் தனது குட்டியினிடம் இவ்வண்ணம் கூறுகின்றது:—'நான் எவ்வளவு பராக் கிரமமுடையவனு யிருக்கிறேன் பார்; அழகான என் தலையைப் பார்; என் கால்களைப்பார்; அவைகள் எப் படிப் பருத்துத் திரண்டிருக்கின்றன. என்னுல் மிக வேகமாய் ஓடக்கூடும்!' மான் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கையில் தூரத்தில் திடீரென்று நாய்கள் குரைக்கும் சத்தம் கேட்டது. கேட்டவுடனே, கலை மான் ஓட்டம் பிடித்தது. வெகு தூரம் ஓடிக் களைத் துப் பின், இரைக்க இரைக்கத் தன்னிருப்பிடம் வந்து சேர்ந்தது. அப்பொழுது குட்டி, தன் தாயைப்பார்த்து, "'நான் எவ்வளவு பலசாலி பார்!' என்று என்னிடம் இப்பொழுதுதான் சொல்லிக்கொண்டிருந்தாய்; நாய் குரைத்த சத்தம் கேட்டதும் பெரிய ஓட்டம் பிடித் தாயே! இஃது என்ன ஆச்சரியம்!" என்று கூறிற்று. அதுகேட்ட மான், 'ஆம்; குழந்தாய்! நாய்கள் குரைக் கும் சத்தம் என்காதில் பட்டால் என் தைரியமெல் லாம் எங்கேயோ போய்விடுகிறது' என்று கூறிற்று.

இதைப் போன்றவர்களே நாமெல்லோரும். மனித சமூகத்தை மிகவும் உயர்வுள்ளதாக எண்ணு கிறோம். அதிக பலசாலிகளென்றும், தைரிய சாலிகளென்றும் நம்மைப்பற்றி நாமே பெருமை பாராட்டிக்கொள்கிறோம். மிக அரிய பெரிய தீர்மானங் களைச் செய்கிறோம். ஆனால், துன்பங்கள் என்னும் நாய்கள் குரைக்கும்பொழுது இவையெல்லாவற்றை யும் மறந்து, கதையிற் கூறிய மான்போல் செய்யத் தலைப்படுகிறோம். இங்ஙனமாயின், மேற்கண்ட போத னைகளால் யாது பயன்? மேலான பயன் உண்டு; அஃது என்னெனின், உறுதியுடன் இடைவிடாமல் இங்ஙனம் முயற்சி செய்துவந்தால் கடைசியில் வெற்றி பெறுவோம் என்பதே. இதில் ஐயமில்லை. எந்தக் காரியமும் ஒரே நாளில் சித்திபெறமாட்டாது.

"ஆத்மாவைப்பற்றி முதலில் சிரவணம் செய்ய வேண்டும்; பிறகு மனனம் செய்யவேண்டும்; அதன்பின்னர், தியானம் செய்யவேண்டும்." நீலநிற மான வானத்தை எல்லோரும் பார்க்கலாம். தரையில் ஊர்ந்து செல்லும் புழுவும் பார்க்கிறது. ஆனால் அவ் வானம் எவ்வளவு தூரத்திலிருக்கிறது! அதைப் போன்றதே நமது லக்ஷியார்த்தமும். நமது குறி வெகு தூரத்தில் இருக்கிறது என்பது உண்மைதான். எனினும் அதே சமயத்தில் எப்படியாகிலும் நாம் அதைக் கைக்கொள்ள வேண்டும் என்பதையும் நாம் அறிவோம். எல்லாவற்றிலும் உயர்ந்த லக்ஷியத்தை நாம் கைக்கொள்ள வேண்டியதே. துரதிருஷ்டவசமாக மக்களில் பெரும்பான்மையோர் இவ்வாழ்க்கையில்

யாதொரு லக்ஷியமுமின்றி, அந்தகாரத்தில் அழுந்தி, அறிவிலிகளாய்த் தங்கள் வாழ்நாளைக் கழித்து வருகின்றனர். இலக்ஷியம் ஒன்று வைத்துக்கொண்டு வாழ்ந்துவரும் ஒருவன், ஆயிரம் பிழைகள் செய்வானாயினும், இலக்ஷியம் ஒன்றுமில்லாதவன் ஐம்பதினாயிரம் பிழைகள் செய்வான் என்பது திண்ணம். ஆதலின் ஒரு இலக்ஷியத்தைக் கொண்டிருப்பதே உத்தமம். இந்த இலக்ஷியார்த்தம் நமது இதயத்திற் புகுந்து மூளையில் (புத்தியில்) தங்கி, நாடி நரம்புகளில் நுழைந்து, இரத்தத்தின் ஒவ்வொரு துளியிலும் ஊறி, உடலின் ஒவ்வொரு மயிர்க்காலிலும் ஊடுருவிக் கலந்து நிற்கும் வரையில், அதைப்பற்றி நம்மாலான வரைக்கும் சிரவணம் செய்து வரவேண்டும். சிந்தித்துத் தெளிதல் வேண்டும். "உள்ள நிறைவால் வாய் பேசும்" என்று முதுமொழி யொன்று வழங்குகின்றது. அங்ஙனமே உள்ள நிறைவால் கையும் வேலைசெய்யும்.

உள்ளிருந்து நம்மை ஏவும் சக்தி, நமது எண்ணமேயாம்; ஆதலின் உயர்ந்த எண்ணங்களினால் மனத்தை நிறையச் செய்யுங்கள்; நாடோறும் உயர்தரக் கருத்துக்களைக் காதாற் கேளுங்கள்; நீண்ட நாள் அவைகளைச் சிந்தியுங்கள். இவ்வெண்ணங்கள் கைகூடாமற் போகலாம்; அதைப்பற்றிக் கவனியாதேயுங்கள். தோல்வி உண்டாவது இயல்பே. தோல்விகளே உயிர் வாழ்வுக்கு அழகைத் தருவனவாகும். இவையில்லாத உயிர் வாழ்க்கை என்ன பயனைச் செய்யும்! இந்தப் போராட்டங்கள் இல்லையாயின், உயிர் வாழ்க்கை மதிப்பற்றுப்போம். அதனை ஒருவரும் விரும்பார். இவைக

ளில்லாவிட்டால், வாழ்க்கையிலுளதாகும் ருசியாவும் எங்கிருக்கும்? ஆகையால் துன்பங்களைக் கவனியாதே; தவறுதல்களைப்பற்றிக் கவலைப்படாதே. ஒரு பசு பொய்பேசினதை நான் கேட்டதேயில்லை. ஆனால் அது பசுதானே; மனிதனாவதுண்டோ? மனிதனைப் போல் அபிவிருத்தி அடைவதுண்டோ? ஒருபொழுதும் இல்லையே. ஆதலால், தோல்வியைப் பற்றியாவது ஒழுக்கந் தவறுதல்களைப்பற்றியாவது கவனியாதே. உன் இலக்ஷியத்தையடைய ஆயிரந்தடவை முயற்சி செய். அவ்வாயிரந் தடவையும் தவறினாலும் இன்னுமொருமுறை முயற்சி செய். கடைசிவரையில் முயற்சியை மாத்திரம் விடாதே. ஈசுவரனை எல்லாப்பொருளிலும் காணவேண்டுமென்பதே மனிதனுடைய இலக்ஷியமாக இருத்தல்வேண்டும். எல்லாப் பொருளிலும் ஈசுவரனைக்காணுதல் உன்னால் இயலாவிட்டால், உனக்கு மிக்க விருப்பமான ஏதாவது ஒருபொருளில், அவரைக்காண முயற்சி செய். பிறகு மற்றுமோர் பொருளில் காணமுயல். இவ்வண்ணம் செய்துகொண்டேவா. ஜீவனது எதிர்கால வாழ்வுக்கு அளவற்றகாலம் இருக்கிறது. ஆதலால், பொறுமையுடன் இடைவிடாது முயன்று வந்தால் கடைசியில் உனது நோக்கம் கைகூடுவது திண்ணம்.

अनेजदेकं मनसो जवीयो नैनद्देवा आप्नुवन् पूर्वमर्षत् ।
तद्धावतोऽन्यानत्येति तिष्ठत्तस्मिन्नपो मातरिश्वा दधाति ॥

तदेजति तन्नैजति तद्दूरे तद्वन्तिके ।
तदन्तरस्य सर्वस्य तदु सर्वस्यास्य बाह्यतः ॥

यस्तु सर्वाणि भूतान्यात्मन्येवानुपश्यति ।
सर्वभूतेषु चात्मानं ततो न विजुगुप्सते ॥
यस्मिन् सर्वाणि भूतान्यात्मैवाभूद्विजानतः ।
तत्र को मोहः कः शोक एकत्वमनुपश्यतः ॥

“மனோவேகத்தைவிட அதிகவிரைவில் அசைய வல்லவரும், மனது எவ்வளவு வேகத்தை எய்தும் ஆற்றலுடையதோ அதனினும் அதிக வேகத்தை எய்துபவரும், தேவர்களுக்கும் எட்டாதவரும், எண்ணத்தைக் கடந்திருப்பவரும் எவரோ, அவர் அசைய, ஏனைய யாவும் அசைகின்றன. அவர் எல்லாவற்றிற்கும் உறைவிடமா யிருக்கிறார். அசைகின்றவராயும் அசைவற்றவராயு மிருக்கின்றார். அண்மையிலும் சேய்மையிலும் இருக்கிறார். எல்லாவற்றிலும் வியாபித்திருக்கிறார். எல்லாவற்றிலும் உள்ளும் புறம்புமாய் உறைந்து, ஊடுருவியும் இருக்கிறார். யாவனொருவன் ஆத்மாவை அனைத்திலும், அனைத்தையும் ஆத்மாவிலும் தரிசிக்கின்றானோ அவன் எதனிடத்தும் பகைமை கொள்ளான். எல்லாப் பூதங்களையும் இந்த ஆத்மாவில் காணும் பொழுதே மனிதன் இரகசியத்தைத் தெரிந்துகொண்டவனாவான். அதன் பின்னர் அவனைப் பிரமை அணுகாது. இந்த ஏகவஸ்துவைப் பிரபஞ்சத்தினிடத்துக் காண வல்லவனுக்குத் துக்கமென்பது எங்கிருக்கும்.”

வேதாந்தம் கூறும் மற்றோர் உயர்ந்த விஷயம் இந்த ஏகத்வமேயாம். எல்லா உயிரும் ஒன்றே; பொருள்கள் யாவும் ஒன்றே. ‘அஞ்ஞானமே நமது துக்கமனைத்திற்கும் காரணம்’ என்பதை இவ்விஷ

யம் எப்படிப் புலப்படுத்துகின்றது என்பதை மேலே காண்போம். ஒருமனிதனுக்கும் மற்றொருவனுக்கும் வேறுபாடு கற்பித்தலும், ஒரு தேசத்தாரை மற்றொரு தேசத்தாரினின்றும் வேறு பிரித்துக்காணலும், பூமிக்கும் சந்திரனுக்கும், சந்திரனுக்கும் சூரியனுக்கும் வேறுபாடு கற்பித்தலும் ஆதிய பலவாகக் காணும் இப் பாவனையே அஞ்ஞானமாகும். ஒரு அணுவை மற்றோர் அணுவிலிருந்தும் வேறு பிரித்தறிதலினாலே, பேதமாகக் காண்பதாலே தான், துக்க மனைத்தும் விளைகின்றன. இந்தப் பேதம் உண்மையில் இல்லவே இல்லை. அது உண்மையன்று என்று கூறுகின்றது வேதாந்தம்.

இப்பேதம், உள்ளதுபோல் காணப்படுகின்றது; உள்ளே நுழைந்துபார்க்கில் அனைத்திலும் ஏகத்வம் இருந்துவருவது புலப்படும். மேற்பரப்பிலேயே அமர்ந்துள்ள நோக்கைப் பெயர்த்துச் சற்றே ஆழ்ந்து செல்லும்படி திருப்பினால், மனிதர்மாட்டும், பல வகுப்பினரிடமும், உயர்ந்தோர் தாழ்ந்தோரிடமும், வறியவர் எளியவரிடமும், மக்கள் தேவரிடமும், மனிதர்கள் விலங்குகளிடமும் ஏகத்வம் ஒளிவீசி நிற்பதைக் கண்ணுறலாம். இன்னும் ஆழ்ந்து நோக்கின், ஒரு பொருளே பலபொருள்களாகத் தோன்றுகிற தென்பது புலப்படும். இந்த ஏகத்வ தரிசனம் பெறும் ஒருவனை, அஞ்ஞானம் மேன்மேலும் வந்து அணுகாது. அப்பொழுது அவனை வஞ்சிக்க வல்லது யாது? எல்லாவற்றின் மர்மத்தை, உண்மை வடிவத்தை, அறிந்தவனாய் விடுகிறான். அதன் பிறகு

அவனுக்குத் துக்கம் என்பது எவ்வண்ணம் இருக்க இயலும்? அவன் எதனை அடைய ஆசைப்படுவான்? ஆராய்ச்சியின் மூலமாக, எல்லாப் பொருள்களின் உண்மைரூபமா யிருப்பதும், அவைகளுக்கு ஆதாரமா யிருப்பதும், அவைகள் எல்லாவற்றுள்ளும் ஊடுருவி யிருப்பதும் கடவுளே என்று ஐயந்திரிபற உணர்ந்து கொண்டவனாய் விடுகிறான். அதுவே சச்சிதானந்த பிரம்மம். அதனிடத்துப் பிணியில்லை, மரணமில்லை; துக்கமில்லை, துன்பமில்லை; மனக்குறைபுமில்லை. யாவும் அகண்டமாய் ஆநந்தபூர்த்தியாய் விளங்குவதாகும். அப்படியிருக்க, அவன் யாருக்காகத் துக்கிப்பது? உண்மையில் மரணமென்பதில்லை; துன்பமென்பதும் இல்லை. யார் யாருக்காக வருந்துவது? யாருக்காகத் துன்பப்படுவது? கடவுள் பரிசுத்தர். நாமரூப மற்றவர்; நிராகாரர்; குற்றமற்றவர்; ஞாதா; பெருங் கவிவாணர், சுயம்பு; எல்லாருக்கும் அவரவர் யோக்கியதைக்குத் தக்கவாறு அளிக்க வல்லவர். இவ்வியல்பினையுடைய பரம்பொருளே எல்லாப் பொருள்களிலும் செறிந்திருக்கின்றார். இந்த அவிவேகத்தை, அஞ்ஞான காரியமாகிய பிரபஞ்சத்தை நித்தியமாக எண்ணி அதனை யார் வழிபட்டு வருகின்றனரோ, அன்னோர் அந்தகாரத்தில் உழன்று கொண்டிருக்கும் மாந்தரேயாவார். இவ்வஞ்ஞான உலகிலேயே, தங்கள் வாழ்நாள் முழுதும் கழித்து, அதைவிடச் சிறந்தது அல்லது உயர்ந்ததான வேறு யாதொன்றையும் காணாதார் இன்னும் பெரியதோர் அந்தகாரத்தில் உழலும் மானிடராவார். எவனொருவன் பிரகிருதியின்

உதவியைக்கொண்டே அதற்கு அப்பாலுள்ள பரம் பொ[illegible] அவனை மரணத்தைக் கடந்து நிரதிசயானந்தானுபவ முறுகின்றான்.

हिरण्मयेन पात्रेण सत्यस्यापिहितं मुखम् ।
तत्वम्पूषन्नपावृणु सत्यधर्माय दृष्टये ॥

पूषन्नेकर्षे यम सूर्य प्राजापत्य व्यूह रश्मीन् समूह ।
तेजो यन्ते रूपं कल्याणतमं तत्ते पश्यामि योऽसावसौ पुरुषः सोऽहमस्मि॥

"ஓ சூரியனே! உனது சொர்ணமயமான பிம்பத்தால் பரம்பொருளை மறைத்துள்ளாய்; உன்னுள்ளிருக்கும் அப்பரம்பொருளை நான் தரிசிக்கும் வண்ணம் மறைப்பை நீக்கி யருள்வாயாக. உன்னிடமிருக்கும் (ஜோதிவடிவான) உண்மையை அறிந்துகொண்டேன்; உன்னுடைய கிரணங்களி னுடையவும் உன் பிரதாபத்தினுடையவும் உட்கருத்தைத் தெரிந்துகொண்டேன். உன்னுள் பிரகாசித்துக் கொண்டிருப்பது யாதோ, அதனை நான் கண்டுகொண்டேன். உன்னுள்ளிருக்கும் பரம்பொருளைக் காண்கின்றேன். உன்னுள் இருப்பது எதுவோ, அதுவே என்னுள் இருக்கிறது. அதுவேநான்."

# பவஹாரி பாபா

அல்லது

## காற்றையே உணவாய்க்கொண்ட பெரியார்

ஸ்ரீமத் ஸ்வாமி விவேகாநந்தர்

எழுதியது



மொழி பெயர்த்தவர், இராமகிருஷ்ணன் B.A

1929

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்.

சென்னை.

# ஸ்ரீமத் ஸ்வாமி விவேகாநந்தர் அருளிய நூல்கள்

| | | ரூ. அ. பை. |
|---|---|---|
| கர்மயோகம் | .... | 0—12-0 |
| பக்தியோகம் | .... | 0—10-0 |
| கடிதங்கள் | .... | 0—8—0 |
| நமது தாய்நாடு | .... | 0—8—0 |
| சிகாகோ பிரசங்கம் | .... | 0—5—0 |
| எனது போர்முறை | .... | 0—3—0 |

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின்
1003 உபதேசங்கள் (காலிகோ) 1-12—0
(சாதா) 1—6—0

ஸ்ரீ ராமகிருஷ்ண வசனாமிருதம்
(காலிகோ) 1—8—0

'ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்' சந்தாதாரர்களுக்கு மேற்கண்ட புத்தகங்கள் குறைந்த விலைக்குக் கொடுக்கப்படும்.

# பவஹாரி பாபா

அல்லது

## காற்றையே உணவாய்க்கொண்ட பெரியார்

(காஜிபூரில் எழுந்தருளிய மகரிஷி)

### முன்னுரை

துன்புறும் மாக்கள் தொகுதிக்கு உதவிபுரிவதென்ற மகத்தான செய்கைக்கு மட்டுமே புத்தபகவான் அதி முக்கியத்வத்தை யளித்து, தற்காலிகமாக மதத்தினுடைய பலவேறு பகுதிகளையும் அறவே அநாதரவு செய்துவிட்டார். ஆயினும் சுயநலத்தின் மீது இடைவிடாத பற்றைக் கொள்வது முற்றிலும் பயனற்றது என்ற மாபெரும் உண்மையை உணர அவரும் அநேக வருடங்கள் ஆத்மசோதனை செய்யவேண்டி யிருந்தது. புத்தபகவானைப்போலத் தன்னலங் கருதாமையையும் தளராது வேலை செய்யும் விசேஷ சக்தியையும் பெற்ற ஓரறிஞரை நமது உயர்ந்த கற்பனு சக்தியினாலும் பாவனை செய்து கொள்ள முடியாது ; அங்ஙனமிருந்தும் விஷயங்களின் உட்பொருளை யறிவதில் அவருக்கு நேர்ந்த கஷ்டங்களைப்போல வேறு எவருக்காவது துன்பம் சம்பவித்த

துண்டா? செய்யப்படும் கருமம் எவ்வளவுக்கெவ்வளவு பெரிதாயுள்ளதோ அவ்வளவுக்கவ்வளவு அக்கருமத்தைச் செய்யும் மனிதனிடம், இயக்கும் சாக்ஷாத்கார சித்தி மிகவும் அதிகமாக இருந்தே யாகவேண்டும் என்ற நியதி முக்காலத்திலும் உண்மையே. முன்னமே தீர்க்காலோசனையுடன் திறமையாக வகுத்துத் திட்டம் செய்து வைக்கப்பட்ட ஒருகாரியத்தை, அனுபவத்தில் கொணர ஏகாக்கிரதை கூடிய சிந்தனைசக்தி அவ்வளவு அவசியமாகத் தோன்றுது; எனினும் மிகப் பெரிய உற்சாக சக்தி யெனப்படும் மன வெழுச்சிகள் யாவும், மிக உத்கிருஷ்டமான ஏகாக்கிர சிந்தையின் பரிணமமேயாகும். சாமானியமுயற்சிகளுக்கு, அக் கருமத்தின் கொள்கை இன்னதெனத் தெரிந்திருந்தாலே போதுமெனக் கொள்ளலாம். அற்பமான சிறு அலை யொன்றை உண்டாகச் செய்யும் சக்தியானது பிரம்மாண்டமான பெரிய அலையை எழுப்பும் சக்தியினின்றும் வேறுனதேயாகும்; ஆயினும், பெரியஅலையை உற்பத்தி செய்யும் அம் மகாசக்தியின் ஒரு துளியே சிறு அலையாகத் தோன்றியிருக்கிறது. உண்மையான விஷயங்கள் அதிகோரமாயும் பயங்கரமாயுமிருப்பினும் சரியே; மாசற்ற உண்மை,—களங்கமற்ற சத்தியம்,—தன்னுடைய இயக்கத்திஞல் நமது இதயத்தின் ஒவ்வொரு நரம்பையும் அறுத்துத் தள்ளிவிடுவதாயினும்சரியே; தன்னலங்கருதாத,—மனப்பூர்வமான,—பரிசுத்தநோக்கத்தை யடைய நமது அவயவங்கள் யாவும் ஒவ்வொன்ருகச் சேதிக்கப்படவேண்டியிருப்பினும் சரியே—எங்ஙனமாயினும், இவை யனைத்

தையும் நாம் கண்டு உணர்ந்து பெற்றாலன்றி, தாழ்ந்த நிலையான கர்மபூமியில் மனமானது அத்தகைய பெரும் அலைகளை எழுப்பமுடியாது. நுண்ணிய பொருளானது தன்னைச் சுற்றி ஸ்தூலத்தைப் பெருக்கிச் சேர்த்துக் கொண்டே சென்று காலங் கழியக் கழிய கொஞ்சங் கொஞ்சமாக வெளித்தோன்றுகின்றது; கண்ணுக்குப் புலப்படாதிருந்தன பிரத்தியக்ஷமாகவும், சாத்தியமாக இருந்தது அனுபவபூர்வமாகவும், காரணம் காரியமாக வும், எண்ணம் ஸ்தூல சரீரப் பிரவர்த்தியாகவும் மாறி விடுகின்றன.

கோடிக்கணக்கான சந்தர்ப்பங்களால் பின்னடை யும்படி செய்யப்பட்டிருக்கும் காரணமானது, சீக்கிரத் திலோ அன்றி நாளடைவிலோ, எப்படியும் காரியமா கத் தோன்றுவது திண்ணம். அங்ஙனமே தீவிரமான ஓர் எண்ணமானது இப்பொழுது எவ்வளவுதான் சக்தி யற்றதாகத் தோன்றிய போதிலும், காரிய உலகில் ஒருநாள் பிரகாசித்து விளங்கப்போவது நிச்சயம். எனவே, நமது இந்திரிய சுகத்தை பெருகச்செய்யும் திறமை ஒரு பொருளுக்கு இருக்கிறதா என்று பார்க் கும் ஒரேமுறையைக் கொண்டே எல்லாவற்றின் குண குணங்களையும் சீர்தூக்கிப் பார்ப்பது நேரான வழி யாகாது.

ஜீவராசியில் எவ்வளவு தாழ்ந்தபடியில் ஒரு பிராணி உள்ளதோ, அதற் கேற்றபடி அப் பிராணி தனது இந்திரியங்களாலேயே அதிகமான இன்பம் அனு பவிக்கின்றது; இந்திரியங்களாலேயே அது வாழ்ந்து வருகின்றது. நாகரிகம், உண்மையான நாகரிகத்தின்

அர்த்தம், மிருக ஸ்வபாவமுள்ள மனிதனை, அவனது இந்திரிய வாழ்க்கையினின்றும்—அவ்வாழ்க்கையினும் மேலான ஸ்திதிகளின் மாட்சிமையை அவனுக்குத் தெளிவுபடுத்தி, அவற்றின் சுவையை அவன் ருசிக்குமாறு செய்வதன் மூலம்—வெளிப்படுத்தி, அவனை உயர அழைத்துச்செல்லும் சக்தியேயன்றி வேறன்று. பகிர்முகமான விஷய இன்பங்களை அதிகரித்துச்செல்வதாகாது.

இந்த உண்மையை மனிதன் இயற்கையாகவே உணர்ந்திருக்கிறான் ; எல்லாக்காலங்களிலும், எல்லாச் சந்தர்ப்பங்களிலும் அவன் தனக்குத்தானே அதை வெளிப்படையாக அறிவித்துக்கொள்ளாமலிருக்கலாம்; சித்தத்தின் தன்மையைப்பற்றி அவன் ஒன்றுக்கொன்று விரோதமான பலவேறு அபிப்பிராயங்களையும் கொண்டிருக்கலாம்; ஆயினும் அவனுள்ளத்தில் வேரூன்றி யிருக்கும் இந்த இயற்கை அறிவு எதையும் ஊடுருவிக்கொண்டு முன்வந்து விடுகிறது. அதனுடைய வன்மையினால்தான் மனிதன் அரிய சித்திகளைப்பெற்ற சித்தனுக்கும், வைத்தியனுக்கும், மந்திரவாதிக்கும், புரோகிதனுக்கும், விஞ்ஞான சாஸ்திரிக்கும் தானாகவே மரியாதை செய்கிறான். ஒரு மனிதனுடைய முன்னேற்றத்தையும் வளர்ச்சியையும் நிர்ணயப்படுத்தக்கூடிய விஷயங்கள் மூன்று. அவை, இந்திரியங்களுக்கு அப்பாலுள்ள உயர்ந்த இவ்விடத்தில் வசிக்க அவனுக்கிருக்கும் திறமையும், அவனுடைய சுவாசப்பைகளால் உள்ளிழுக்கக்கூடிய சிந்தனா சக்தியெனும் பிராணவாயுவின் பரிமாண

மும், அவ் வுயர்ந்த நிலையில் அவன் நழுவாது நிற்கக்கூடிய காலத்தின் அளவுமாகும்.

எனவே, உயிர்வாழ்வதற்கு இன்றியமையாத காரியங்களைச் செய்து முடிக்கத் தேவையான காலம்போக,—எஞ்சியுள்ள நேரத்தைக், கற்றறிந்து பயிற்சிபெற்ற மனிதன் லௌகிக சுகங்கள் எனப்படும் விஷயங்களிற் கழித்துவிட விரும்பமாட்டான் என்பது தெளிந்த உண்மையாகும்; மேலும் அவனது உயர்நோக்கம் பெருகப்பெருக வாழ்க்கைக்கு அவசியமான காரியங்களைச் செய்வதிலும் அவன் குறைந்த ஊக்கத்தைக் காட்ட ஆரம்பிக்கிறான்.

சுகபோகங்களும் கூட, பல லக்ஷியங்களுக்கும் கொள்கைகளுக்கும் ஏற்றவாறு ஒழுங்குபடுத்தப் பெற்று, அவைகளின்மூலம் கூடியவரையில் சூக்ஷ்ம வாழ்வு பிரதிபலிக்கும்படி செய்யப்படுகிறது—இதுவே கலை யெனப்படுவது.

'ஒரே அக்கினியானது புவனத்தில் பிரவேசித்துப் பல்வேறு உருவத்தில் தோன்றியும், அந்தத் தோற்றத்திற்குப் பின்னால் இன்னும் அனந்தமாக இருப்பதைப்போலவே' அனந்தமான சித்வஸ்துவின் ஒரு துளியை,—மிகச் சிறிதான ஒரு துளியையே,—பிரகிருதியின்மீது ஆவிர்ப்பவிக்கும்படி செய்து, அதன் மூலம் நமது விருப்பங்களையும் சுகங்களையும் நிறைவேற்றிக்கொள்ளலாம்; அச் சிறுதுளியைத் தவிர, பாக்கியுள்ள அதன் எல்லையற்ற பாகத்தை நமதிஷ்டப்படி அசைக்கவும் முடியாது. நுண்ணியபொருள்கள் எப்பொழுதும் நமது பார்வைக்கு அகப்படாமல் மறைந்து

கொண்டே இருக்கிறது; நாம் அதை வசப்படுத்திக் கீழே கொண்டுவரச்செய்யும் முயற்சிகளைக் கண்டு அது புன்முறுவல் செய்கிறது. இந்த விஷயத்தில், மஹம்மதுதான் மலைக்குச் செல்லவேண்டுமேயன்றி மலை மஹம்மதை நோக்கிவராது. மிக உயர்ந்த அந்த இடத்தின் அழகையும் சுவையையும் அனுபவிக்க விரும்பினால்,—அதனுடைய ஒளியில் ஆழ்ந்து மூழ்க இஷ்டப்பட்டால்,—அண்டம் முழுமைக்கும் காரணமா யிருக்கும் பிராணனாகிய பரம்பொருளுடன் தனது ஜீவனும் ஒன்றாய் இயங்குவதான உணர்வை யடைய ஆசையுண்டானால்,—மனிதன் தன்னைத் தானே அவ் வுயர்நிலைக்கு உயர்த்திக்கொள்ளவேண்டும்.

ஆச்சரியமான பிரதேசங்களுக்கு நம்மை அழைத் துச் செல்லும் கதவுகளைத் திறக்கும் திறவுகோல் ஞான மே யாகும்; விலங்கினத்தை தெய்வமாக மாற்றுவதும் ஞானமேயாகும்; எதனையறிந்தால் நாம் யாவற்றையும் அறிந்தவர்களாவோமோ,—எது சகலஅறிவுக்கும் பிறப் பிடமோ,—எதனுடைய இயக்கத்தினாலே எல்லா வித் தைகளும் ஜீவரஸத்தைப் பெறுகின்றனவோ,—எது மதங்களுடைய ஜீவனோ, அத்தகைய அழிவற்றபொரு ளிடம் நம்மை அழைத்துச்செல்லும் இந்த ஞானமே எல்லாவற்றிலும் உயர்ந்தது என்பதை மறுக்கமுடியாது; ஏனெனில், இந்த ஞானமொன்றினாலேயே மனிதன் தனது சிந்தனை உலகில் பரிபூரணமான சுகவாழ்க்கையை அடையமுடியும். அத்தகைய ஞானத்தைப் 'பரவித் தை' எனப் பெயரிட்டழைத்த நமதுதேசம் வளம் பெற்று வாழ்க! தத்துவமானது காணப்படும் கிரியா

பூமியில் பரிபூரணமாக ஆவிர்ப்பவித்துத் தோன்று வது அருமை ; ஆயினும் அந்த லக்ஷியம் ஒருபொழு தும் மறைந்து விடுவதில்லை. அது நம் பார்வையினின் றும் ஒருபொழுதும் மறையாமலிருக்கும்படி செய்து கொள்ள வேண்டியதும் நமது கடமையாகும். அவ் வுயரிய லக்ஷியத்தையடைய, நம் கண்ணுக்குப் புல னுகும் வண்ணம் விசையாக நடக்க இயலுவதாயினுஞ் சரி, மிகவும் மெதுவாக அணுவணுவாக ஊர்ந்து செல்ல வேண்டி யிருப்பினும் சரி, அதை என்றும் நாம் மற வாமலிருக்கவேண்டும். இஃது இங்ஙனமாக, மற்றொரு பக்கம் நோக்கினுல், மெய்ப்பொருள் இருப்பது உண் மை—நமது கண்களைக் கையால் மூடிக்கொண்டு அந்த லக்ஷியத்தினுடைய ஒளியை மறைத்துவிட நாம் முயன்று வருகின்றோமாயினும், அது நம் முன் எப்பொழுதும் அதிக ஜோதியுடன் பிரகாசித்துக் கொண்டே இருக்கிறது.

இயற்றப்படும் காரியங்களின் ஜீவரஸம் லக்ஷியத் தினிடமே இருக்கிறது ; நாம் வேதாந்த விசாரணை செய்தபோதிலும், கடினமான தினசரி வாழ்க்கைக் கான கடமைகளைச் செய்தபோதிலும், நமது வாழ்வு முழுவதிலும் ஊடுருவி கலந்திருப்பது இந்த லக்ஷியமே யாம். லக்ஷியமாகிய ஒளியினது கிரணங்களே நேராக வோ கோணலாகவோ பலவழிகளிலும் பிரதிபலித்துப் பரப்பப்பெற்று, ஒவ்வொரு இடைவெளியின் மூலமாக வும் ஒவ்வொரு துவாரத்தின் மூலமாகவும் பிரகாசித் துக்கொண்டிருக்கின்றன ; அறிந்தோ அறியாமலோ அதனுடைய பிரகாசத்திலேதான் நாம் ஒவ்வொரு காரி

2

யத்தையும் செய்தாகவேண்டும். ஒவ்வொரு பொருளும் அதன்வயமாய் வேற்றுருவாக்கப்பட்டோ, உயர்த்தப் பெற்றோ, தாழ்த்தப்பெற்றோ நமது தோற்றத்துக்குப் புலனாகிறது. அந்த லக்ஷியமே நம்மைத் தற்கால நிலைக் குக் கொண்டுவந்திருக்கிறது. இனி நமது வருங்கால வாழ்க்கைக்கு இட்டுச் செல்வதும் அதுவேயாகும். நம்மை முற்றிலும் கவர்ந்திருப்பது இந்த லக்ஷியத்தின் சக்தியேயாகும்; நமது இன்பத்திலும் துன்பத்திலும், நமது மகத்தான கர்மங்களிலும் அற்பச் செய்கை களிலும், நமது நற்குணத்திலும் தீக்குணத்திலும் ஒருங்கே உணரப்படுவதும் இதுவே.

காரிய உலகத்தை இயக்கியமைப்பதில் லக்ஷியத் திற்கு இவ்வளவுசக்தி யிருக்குமானால், அந்த லக்ஷி யத்தை நிர்மாணிப்பதில், கருமங்களுக்குள்ள சக்தி சிறிதும் குறைந்ததன்று. லக்ஷியத்தினுடைய உண்மை யைக் காரிய உலகிலேயே காணக்கூடும். காரிய உல கத்தின் பிரத்தியக்ஷானுபவத்தின் மூலமே லக்ஷிய சித்தி ஏற்பட்டிருக்கிறது. லக்ஷியம் ஒன்று இருக்கின் றது என்பதிலிருந்தே, எங்கோ, எவ்வகையிலோ, காரிய மும் இருக்கவேண்டு மென்பது நிரூபிக்கப்படுகிறது. லக்ஷியமானது மிகப் பரந்து விசாலமாயிருக்கலாம்; ஆனா லும் அது கர்மவாழ்க்கையின் சிறுதுளிகள்பல ஒன்று சேர்ந்த சமுதாயமே யாகும். லக்ஷியமானது பெரும் பாலும், கர்மவாழ்க்கையின் பல அணுக்கள் ஒன்று சேர்ந்து பொதுவாக்கப்பட்டதே யாகும். லக்ஷியத்தி னுடைய சக்தி, காரிய உலகில் பிரகாசிக்கின்றது. அது நம்மீது அரசுசெலுத்துவதும் பிரத்தியக்ஷ காரிய

உலகத்தின் மூலமாகவேதான். காரிய உலகத்தின் மூலமாகவே லக்ஷியமானது கீழ்நிலைக்குக் கொண்டு வரப்பட்டு இந்திரிய கோசரமாக்கப் பெறுகிறது; அப்பொழுதே அது நம்மால் கிரகிக்கக் கூடியதாகிறது. லக்ஷியத்தை அடைவதற்கு நாம் கர்மபூமியின் படிக ளின் மூலமாகவே ஏறிச்செல்லவேண்டும்; அதனிடத் திலேயே நமது நம்பிக்கை யனைத்தும் வேரூன்றி யிருக் கிறது; அதுவே விடாமுயற்சியுடன் வேலைசெய்யப் போதிய தைரியத்தை நமக்கு அளிக்கிறது.

இந்த லக்ஷியத்தைப் பற்றி மிக அழகாக வர்ணிக் கும் வார்த்தைகளைப்பேசி அதிசூக்ஷ்மமான கொள்கை களை உற்பத்திசெய்யும் மனிதக் கூட்டங்களைக் காட்டி லும், அந்த லக்ஷியத்தைத் தனது வாழ்க்கையில் செவ் வனே உருவகப்படுத்திக் காட்டும் ஒரு மனிதன் எவ் வளவோ விசேஷமான சக்தியைக்கொண்டவனாவான்.

பலவேறு தத்துவ சாஸ்திரங்களும் சித்தாந்தங்க ளும் மதத்துடன் — பரவித்தையுடன் — சம்பந்தப் படாதவைகளாயிருந்தாலும்,—அவைகளை வெளிக்குக் கொண்டுவந்து அனுபவசாத்தியமாகச் செய்யப் போரா டிச் சிறிதளவேனும் வெற்றியை யடைந்த சிஷ்யக்கூட் டத்தினர் சிலர் இல்லாமற் போனாலும்,—மனித சமூக மானது அவைகளை முற்றிலும் பயனற்றதாகவோ, வெறும் 'தர்க்க புத்தியினுடைய குஸ்தி' எனவோ கருதிவிடும். சாத்தியமான கொள்கையைச் சிறிதும் கொண்டிராத தத்துவமார்க்கங்களும், சிஷ்யக் கூட்டங் களால் சிலசமயம் ஆதரவளிக்கப்பட்டுச் சிறிதளவு அனுபவசாத்திய மாக்கப்பட்டும் விட்டால், அவைகளும்,

பின்பற்றிச் செல்ல ஒரு ஜனத்திரள் இருப்பின், நிலைத்திருக்கின்றன; சாத்தியமான பல உயரிய கொள்கைகளைப்பெற்று விசாலமான நோக்கத்தைக் கொண்டிருந்த பல சித்தாந்தங்களோ, சிஷ்யக் கூட்டத்தார்— அதனைப் பின்பற்றுவோர் — இல்லாமற் போனதால் வாடி மறைந்துவிட்டன.

சித்தத்தின் இயக்கங்களுக்கு ஏற்றவாறு நமது காரியங்களைச் செய்துகொண்டுபோய் இரண்டையும் சமமாக்கும் திறமை நம்மில் அனேகருக்குக் கிடையாது. சில மகான்களுக்கே அது சாத்தியமாகும். நம்மில் பெரும்பான்மையோருக்கு, ஆழ்ந்து யோசிக்கும்பொழுது வேலைசெய்யும் சக்தியும், தீவிரமாகவேலை செய்யும் சமயத்தில் சிந்தனா சக்தியும் இல்லையெனத் தோன்றுகிறது. இதனால்தான் உயர்ந்த சிந்தனா சக்தியைக் கொண்ட பல பெரியார்கள், தங்களது உயரிய லக்ஷியங்களை அனுபவபூர்வமாகச் செய்யும் காரியத்தைப் பின் வருவோருக்கு வைத்துவிட்டுச் சென்று விடுகின்றனர். பிற்காலத்தில் சுறுசுறுப்பும் அதிருஷ்ட புத்தியும் வாய்ந்த சில மனிதர் தோன்றி அவைகளைக்கிரகித்து வேலைசெய்து வெளியிடும் வரையில் இம்மகான்களது லக்ஷியங்கள் காத்திருக்கவேண்டியிருக்கின்றன. ஆனால் நாம் இதை எழுதும் பொழுதே, பார்த்தசாரதியான ஸ்ரீ கிருஷ்ணனுடைய உருவம் நம்முன் தோன்றுகிறது—இருபுறச் சேனைகளுக்கும் நடுவில் தேரில் நின்றுகொண்டு, தமது இடக்கையினால் ரதத்தில் பூட்டியிருக்கும் உயர்ந்த ஜாதி அசுவங்களை அடக்கி இரும்புக்கவசமணிந்த யுத்தவீரனாய் அப்

பெரும் சேனைமுழுவதையும் சுற்றிப் பார்த்து இருதிறப் படையின் பலத்தைப்பற்றிய ஒவ்வொரு விவரத்தையும் கூர்ந்து கவனித்துவந்தார். அதே சமயத்தில் கர்ம யோகத்தின் அதியாச்சரியமான ரகஸ்யத்தை, பிரமித்துநிற்கும் அர்ஜுனனைநோக்கி, 'கர்மத்தில் அகர்மத்தையும் அகர்மத்தில் கர்மத்தையும் எவன் காண்கிறானோ அவனே மனிதர் யாவரிலும் புத்திமான்; அவனே யோகி. அவனே சகலகர்மத்தையும் செய்தவன்' என்று சாங்கோபாங்கமாகவுபதேசம்செய்யும் அந்த பகவானுடைய ஞாபகம் நமக்கு உண்டாகிறது. அதுவே பரிபூரணமான லக்ஷியம் எனப்படுவது. ஆனால் வெகு சிலரே அதை அடைகின்றனர். எனவே நாம் விஷயங்களை உள்ளது உள்ளபடியே உணர்ந்து வெவ்வேறு ஜீவர்களில் வெவ்வேறாகத் தோன்றி இருக்கும் பரிபூரணத்தின் பல அம்சங்களை ஒன்று சேர்ப்பதுடன் திருப்தியடைய வேண்டியதே.

மதத்தில் அதிதீவிர சிந்தனை சக்தியைக்கொண்ட மனிதரையும், பிறருக்கு உதவிசெய்வதில் மிக்க ஊக்கம் கொண்டிருப்போரையும், தைரியத்தையும் உயர்ந்த சாக்ஷாத் காரானுபூதியையும் பெற்ற ஜீவர்களையும், அமைதியையும் பணிவையும் கொண்டிருப்போரையும் நாம் பெற்றிருக்கிறோம்.

# இரண்டாம் அத்தியாயம்

இச் சிறுநூலின் நாயகர், அதியாச்சரியமான அடக்கத்தையும் விசேஷமான சாக்ஷாத்கார சித்தியையும் பெற்றிருந்த உத்தமராவர். காசியைச்சார்ந்த குஜிநகரத்திற்கு அருகிலுள்ள ஒருகிராமத்தில் பிராம்மணகுலத்தில் அவதரித்தவர்; சிறுபையனுயிருக்கும்பொழுதே இவர் காஜிபூரில் வசித்துவந்த தமது சிற்றப்பனிடம் போய்க் கல்வி கற்றுவந்தார். இவரே பிற்காலத்தில் பவாஹாரி பாபா என்ற பெயரா லழைக்கப்பட்டார்.

தற்காலத்தில் முனிவர்களையும் யதிகளையும் சந்நியாசிகள், யோகிகள், வைராகிகள், பந்தினர் என்ற நான்கு பிரிவுகளாகப் பிரித்திருக்கின்றனர்; சந்நியாசிகள் எனப்படுவோர் ஸ்ரீ சங்கராசாரியரை யடுத்து அத்வைத மதத்தைப் பின்பற்றுபவர்; யோகிகள் எனப்படுவோர் அத்வைத மதத்தை அனுசரித்த போதிலும் பலவித யோக முறைகளை அப்பியசித்து அவற்றில் திறமைபெற்றவர். வைராகிகள் என்போர் ஸ்ரீ ராமானுஜாசாரியர் முதலியவருடைய கொள்கைகளைப் பின்பற்றுவோ ராவர்; மகம்மதியர் அரசாட்சி செய்த காலத்தில் ஸ்தாபிக்கப்பட்ட சில மடங்களைச் சேர்ந்து இவ்விரண்டு மார்க்கங்களுள் எதையேனும் ஒன்றைப்பின்பற்றுவோரே பந்தினர் எனப்படுவோர். பவாஹாரி பாபாவினுடைய சிறியதகப்பனார் ஸ்ரீ இராமானுஜ சித்தாந்தத்தைச் சேர்ந்த ஒரு நைஷ்டிக பிரம்மசாரியாவர் — அஃதாவது ஆயுள் முழுவதும்

பிரம்மசரிய விரதத்தைப் பூண்டிருந்தவர். காஜிப் பூருக்கு வடக்கே இரண்டுமைல் தூரத்தில் கங்கை நதிக்கரையில் தமக்குச் சொந்தமாயிருந்த நிலத்தில் வசித்து வந்தார். அவர் பவாஹாரி பாபாவையே தமது வீட்டில்வைத்து வளர்த்து அவரையே சகல சொத் துக்களுக்கும் உரிமைகளுக்கும் வார்சுதாரராகச் சுவீ கரித்துக்கொண்டு விட்டார்.

பவாஹாரி பாபாவினுடைய பால்ய வாழ்க்கை யைப்பற்றிய விவரங்கள் அதிகமாக எதுவும் தெரிய வில்லை. பிற்காலத்தில் அவரை அவ்வளவு பிரபலமாகச் செய்த சில விசேஷகுணங்களும் அவருடன் அமைந் திருந்ததாகத் தெரிவிக்கும் சூசனையாவது இச்சமயத் தில் இருந்ததாகத் தோன்றவில்லை. வியாகரணம், நியா யம் என்ற இரு சாஸ்திரங்களையும் அவர் சிரத்தை யுடன் அப்பியசித்ததாகவும், தம் மத சித்தாந்தத்தை நன்கு கற்றுவந்ததாகவும், தோழர்களைச் சிற்சில சமயம் மிக்க சாமர்த்தியமாக ஏளனஞ்செய்து அதில்பேரானந் தம் கொள்ளுவதும் சுறுசுறுப்பும், உல்லாச இயற்கை யும் கொண்டிருந்ததாகவும் மட்டுமே தெரியவருகிறது.

இங்ஙனம் பிற்காலத்தில் மகரிஷியான இச்சிறுவர், புராதன காலத்தில் வித்தியார்த்திகளுக்கென விதிக் கப்பட்டிருந்த தினசரிகடமைகளை ஒழுங்காகச்செய்து காலங்கழித்து வந்தார். குதூகலமான, விளையாடல் மிகுந்த, களங்கமற்ற, சிறு பிராயத்தில் தமது வித்தை யைக் கற்றுக்கொள்ளுவதில் சாதாரண மாணவர்களைக் காட்டிலும் சற்று அதிகமான சிரத்தையும் ஊக்கமும் காட்டிப் பலவேறு பாஷைகளைப் பயிலுவதில் விசேஷ

திறமையைக் கொண்டிருந்தார் என்பதைத்தவிர, பிற்காலத்தில் இவரிடத்தே தோன்றி, இவரது சிறு பிராயமே ஏதோ ஒரு பழைய வதந்தியாக அனைவராலும் மறக்கப்பட்டுப்போன சமயத்தில், வெகு விசித்திரமானதும், அதிபயங்கரமானதுமான ஒரு தியாகத்திற் போய் முடிவடைந்த மகத்தான திடபுத்தியையும் கலங்காத உறுதியையும் வெளிக்குக் காட்டக்கூடிய விஷயம் வேறெதுவுமே காணப்படவில்லை. இப்பிராயத்தில் ஏற்பட்ட ஒரு சம்பவத்தின்பயனாக இச்சிறு வித்தியார்த்தி முதன் முதலாக வாழ்க்கையின் உட்பொருளின் உண்மையை உணர்ந்தார்போலும்; உடனே அவர் இதுகாறும் புத்தகங்களையே கூர்ந்துநோக்கிக் கொண்டிருந்த தமது கண்களை நன்றாகத் துடைத்துக்கொண்டு தம்முடைய மனோ நிலைமையை நுட்பமாக ஆராயத் தொடங்கினார்; மேலும், கேவலம் புத்தகவாக்கியமாக இல்லாமல் நிலையாக இருக்கக்கூடிய விஷயத்தை மதத்தில் கண்டுபிடிக்க அவர் ஆவல் கொண்டார். இச் சமயத்தில் அவர் சிற்றப்பனும் காலமானார். தமது இளமையான இதயத்தின் அன்பு முழுவதும் இதுகாறும் ஒருங்கே செலுத்தப்பட்டிருந்த ஒருமுகமும் மறைந்துவிடவே இவ்வாலிபரின் துக்கம் கரைகடந்து போய் விட்டது. தமது வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள நஷ்டத்தை, என்றும் மாறாது நிற்கக்கூடிய ஒரு அனுபூதியின் மூலம் அகற்றிவிடவேண்டுமென அவர் தீர்மானித்துக்கொண்டார்.

இந்தியாவில் ஒவ்வொருவிஷயத்திற்கும் ஒவ்வொரு குரு அவசியமாகும். புத்தகங்கள் வெறும் மேற்போக்

கானவையென்றே ஹிந்துக்களாகிய நாம் நம்பிவரு கிரோம். ஒவ்வொரு கலையிலும், ஒவ்வொரு சாஸ்திரத் திலும், விசேஷமாக வேதாந்தத்திலும் அததற்கு ஜீவாதாரமாயுள்ள ரகசியங்கள் குருவிஞல் சிஷ்யனுக்கு அளிக்கப்பட்டே யாகவேண்டும். வெகு புராதன காலம் முதற்கொண்டே இத் தேசத்தில் மோட்ச இச்சையைக்கொண்ட ஜீவன்கள் ஏகாந்தமான இடங் களுக்குச் சென்று எவ்வித இடையூறுமின்றி ஆத்ம சாஸ்திரத்தின் ரகசியங்களைப் பயின்று ஞானத்தை அப்பியசிப்பது வழக்கமாக இருந்து வந்திருக்கிறது. இத்தேசத்தில் ஏதோ ஒரு மஹரிஷியினது வாசஸ் தலம் என்ற ஐதிஹ்யம் ஏற்பட்டுப் புண்யக்ஷேத்திர மாகக் கருதப்படாமல் இருக்கும் வனமோ, மலையோ, புனிதமான இடமோ இக்காலத்திலும் ஒன்றுகூடக் கிடையாது.

'நில்லாது பள்ளம் நோக்கிப் பாயும் தண்ணீரே பரிசுத்தமாயிருப்பதைப்போலத் தங்காது யாத்திரை செய்யும் யோகியே பரிசுத்தமானவன்' என்ற ஒரு பழ மொழியும் உண்டு. இந்தியாவில் பிரம்மசரிய விரதத் துடன் கூடிய சந்நியாச வாழ்க்கைவாழ முற்படுவோர் யாவரும் தங்களது காலத்தில் பெரும்பாகத்தைப் பரதகண்டத்தின் வெவ்வேறு திசைகளிலும் சஞ்சாரம் செய்து பல புண்ணிய க்ஷேத்திரங்களைத் தரிசிப்பதி லேயே கழித்துவிடுவது சாதாரணவிதியாக இருந்து வந்திருக்கிறது; இதன் மூலம் அவர்கள் தூசுபடிந்து துருப்பிடிப்பதைத் தடுத்துக்கொள்ளுவது போல, தங் கள் மீது உலகப் பற்றுக்கள் படியாமல் பரிசுத்தர்களாவ

துடன் வேதாந்த உபதேசத்தை ஒவ்வொரு வீட்டு வாயிலிலும் கொண்டு வந்து சேர்க்கின்றனர். இந்தியா வின் நான்கு மூலைகளிலும் உள்ள நான்கு மகா க்ஷேத் திரங்களுக்கு யாத்திரை செல்வது உலகைத் துறக்கும் ஒவ்வொருவருக்கும் இன்றியமையாததாகக் கருதப் படுகிறது.

நமது வாலிபப் பிரம்மசாரியான பவாஹாரிபாபா வும் இவ்விஷயங்கள் எல்லாவற்றையும் நன்கு ஆலோசித் திருக்கவேண்டும். ஆனால் இவை எல்லாவற்றிலும் அவருக்கு மிக முக்கியமாகத் தோன்றியது ஞானத்தை அடையவேண்டுமென்ற தீவிர இச்சையே என்பது நிச்சயமாகும். அவருடைய க்ஷேத்திரயாத்திரையைப் பற்றி நமக்கு அதிகமாக ஒன்றும் தெரியாது. ஆனால் வைஷ்ணவ சித்தாந்தத்தைப் பற்றிய நூல்கள் மிகுதி யாக எழுதப்பட்டுள்ள திராவிட பாஷைகளில் அவர் பெற்றிருந்த பாண்டித்தியத்தினின்றும், ஸ்ரீசைதன்ய ரது கோஷ்டியைச் சேர்ந்த வைஷ்ணவருடைய பழைய வங்காள பாஷையில் அவருக்கிருந்த திறமையினின்றும் அவர் வங்காளத்திலும் தென்னிந்தியாவிலும் நீண்ட காலம் தங்கியிருந்திருக்க வேண்டுமென நாம் ஊகித் துக் கொள்ளலாம்.

அவர் தரிசித்த க்ஷேத்திரங்கள் எல்லாவற்றிலும் ஒன்றே மிக முக்கியமான தென்று பவாஹாரியின் பாலிய சிநேகிதர்கள் கூறுகின்றனர். கத்தியவாரி லுள்ள கர்னார் மலையின் உச்சியில்தான் முதன் முத லாக அவர் யோகம் அப்பியசிக்கத் தொடங்கினராம்

பௌத்தமதத்தினருக்கு மிகவும் புனிதமாயிருந்தது இந்த கர்னூர்மலையேயாகும். அதனுடைய அடிவாரத்தில் உள்ள பெரும்பாறையொன்றின் மீதே 'தேவப்பிரிய மன்னன்' ஆன அசோகரால் முதன் முதலாக எழுதுவிக்கப்பட்ட சிலாசாஸனம் உள்ளது. அதன் கீழ் பல நூற்றாண்டுகளாகத் தேய்ந்து மறைந்து வந்திருக்கும் மகா ஸ்தூபிகளுடைய சின்னங்கள் காடுகளால் மூடுண்டு யாவராலும் கர்னூர் மலைத் தொடர்ச்சியாகிய சிறு குன்றுகள் என நம்பப்பட்டு வருகின்றன. இப்பொழுதுங்கூட மிகப்புராதனமான ஹிந்து மதத்தைச் சேர்ந்தவருக்கும் இம்மலை புண்ணிய க்ஷேத்திரமாகவே இருந்து வருகிறது; புராதன ஹிந்து மதத்தின் புதிப்பிக்கப்பட்ட தொரு ஸ்தாபனமே புத்தமதமாகும் என இப்பொழுது யாவராலும் கொள்ளப்படுகிறது. ஆனால் உலகம் முழுவதும் விஜயம் செய்து வெற்றிகொண்ட தனது சந்ததியான பௌத்தமதம் நவீன ஹிந்து மதத்துடன் கலந்து ஒன்றாகும் வரையில் சிற்ப வேலைகளிலும் நிர்மாணவேலைகளிலும் பிரவேசிக்காமலே இப்புராதன ஹிந்து மதம் இருந்து வந்தது பெரும் விந்தையே யாகும்.

# மூன்றும் அத்தியாயம்

கிர்னார் மலையானது அவதூதகுருவான மகாத்மா தத்தாத்திரேயருடைய வாசத்தினுல் புனிதமாக்கப் பெற்ற ஸ்தலமாக ஹிந்துக்களால் கொண்டாடப்படு கிறது. இப்பொழுதும் கூட அம்மலையுச்சியில் பக்குவ தசையை யடைந்துள்ள யோகசிரேஷ்டர்களை அதி ருஷ்டமுள்ள யாத்திரிகர்கள் சந்திக்கக் கூடும் என்று ஜனங்கள் சொல்லிக் கொள்ளுகின்றனர்.

நமது இளம் பிரம்மசாரியினது வாழ்க்கையில் இரண்டாவது முக்கிய சம்பவமானது, காசிக்கருகில் கங்கைக்கரையில் ஒரு குகை தோண்டிக் கொண்டு அதில் யோகாப்பியாசம் செய்துவந்த ஒரு சந்நியாசி யால் சிஷ்யராக ஏற்றுக்கொள்ளப்பட்டதே எனத் தெரியவருகிறது. பவாஹாரி பாபாவும் பிற்காலத்தில் காஜிபூருக் கருகில் கங்கைக்கரையின் மீதுள்ள பிர தேசத்தில் தோண்டப்பட்ட ஒரு ஆழமான சுரங்கத் தில் வாசம் செய்துவந்தது இந்த குருவினுடைய வழக் கத்தைப் பின்பற்றியே போலும்.

சீதோஷ்ண ஸ்திதி சமமாகவும், மனத்தைக் கலக்கும் சத்தங்கள் உண்டாகாமலும் இருக்கக்கூடிய குகைகளிலோ தனிப்பிரதேசங்களிலோ வசிப்பது தான் மிக உயர்வென யோகிகள் எப்பொழுதும் உபதேசித்து வந்திருக்கின்றனர்.

இதே சமயத்தில் காசியிலிருந்த ஒரு சந்நியாசியிடம் பவாஹாரி பாபா அத்வைத சித்தாந்தத்தைப் பயின்று வந்ததாகவும் தெரியவருகிறது.

இங்ஙனம் பல வருஷங்களை யாத்திரையிலும் வித்தியாப்பியாசத்திலும் ஆத்மசோதனையிலும் கழித்துவிட்டு நமது யௌவன பிரம்மசாரி தாம் பிறந்து வளர்ந்த இடத்திற்குத் திரும்பினார். அவரது சிற்றப்பன் அப்பொழுது உயிருடன் இருந்திருப்பாராகில், அவர், புராதனகாலத்தில் ஒருமகரிஷியானவர் தமது புத்திரனைக் கண்டு, 'குழந்தாய் ! இன்று உனது முகம் பிரம்ம தேஜஸுடன் ஜ்வலிக்கிறது !' என்று ஆச்சரியத்துடன் கூறுவதற்குக் காரணமாயிருக்கும் அதே ஒளியைத் தமது பிள்ளையின் முகத்திலும் கண்டிருப்பர். ஆனால் அவரை அங்கு வரவேற்று நின்றவர் அவரது பாலிய சிநேகிதர்களேயாவர். அத் தோழர்களிற் பெரும்பான்மையினர் மீளாத் துயரத்தையும் அற்ப சிந்தனைகளையும் கொண்ட ஸம்ஸாரத்துட் புகுந்து முற்றிலும் அதன் வசமாக்கப் பட்டிருந்தனர்.

ஆனால் தங்களுடன் இருந்து வெகுநாட் பழகியவனும் விளையாட்டுத் தோழனுமான பவாஹாரியினுடைய நடத்தையிலும் தோற்றத்திலும் குணத்திலும் ஒரு பெரும் மாறுதலை—விவரிக்க முடியாத வேற்றுமையை,—யாவரையும் மயங்கச்செய்யும் நவீனமான தன்மையை—அத் தோழர்கள் கண்டனர். இருந்தபோதிலும், அந்த வேற்றுமையானது அவர்களையும் அதே வழியில் பிரவர்த்திக்கச் செய்யவோ, அதே ஆராய்ச்சியையும் சோதனையையும் செய்யவோ

தூண்டவில்லை. துன்பமும் பரிசுத்த மின்மையும் நிறைந்த இவ்வுலகினின்றும் வெளியேறிவிட்ட ஒரு மனிதருடைய அபூர்வமான மாறுதலைக்கண்டு வியந்து அவர்கள் நின்றுவிட்டனர். அவரது விசேஷமான பிரபாவத்தை அவர்கள் இயல்பாகப் போற்றிப் பணிந்தனரேயன்றி வாயைத்திறந்து கேள்வி ஏதும் கேட்டனரில்லை.

இதற்குள் இந்த யோகியின் அற்புதச் செய்கைகள் வரவர அதிகமாகவும் பிரபலமாகவும் ஆயின. காசியிலிருந்த தமது குருவைப் பின்பற்றி, அவரும் தரையினுள் ஒரு குகை தோண்டிக்கொண்டு அதனுட்சென்று வெகுநேரம் அங்கேயே தங்கியிருந்தார். பின், பார்த்தவர் அஞ்சத்தக்க முறையில் தமது உணவைச் சீர்திருத்திக்கொள்ளத் தொடங்கினார். பகல் முழுவதும் தமது ஆச்சிரமத்தில் வேலைசெய்துவிட்டுத் தமக்கு மிக்கபிரியமான ஸ்ரீராமபிரானது பூஜையையும் முடித்துக்கொண்டு நல்ல உணவுகளை சமைப்பார்—சமையல் செய்வதில் அவர் அபூர்வதிறமையைப் பெற்றிருந்தார் எனக் கூறப்படுகிறது ; பிறகு பகவதார்ப்பணஞ்செய்த உணவு முழுவதையும் தமது நண்பர்களுக்கும் ஏழைகளுக்கும் பகிர்ந்து கொடுப்பார்; நாள் முழுவதும் அவர்களுடைய சௌகரியங்களைக் கவனித்துக் கொண்டேயிருந்து, இரவில் அனைவரும் துயிலிலாழ்ந்த பிறகு அவர் மெதுவாக வெளிவந்து கங்கைநதியை நீந்தி மறுகரையை அடைவார். அங்கு இரவு முழுவதையும் தியானம் ஜபம் முதலிய சாதனைகளைச் செய்து கொண்டே கழித்துவிட்டு விடிவதற்குள் ஆச்சிரமத்

திற்குத்திரும்பிவந்து தமது நண்பர்களுக்கு நித்திரை தெளிவிப்பார்; உடனே மறுபடியும் தினசரிக் கடமையான 'அதிதி பூஜை'—பிறரைத் தொழுவது—ஆரம்பமாகிடும்.

அவர் உட்கொண்ட உணவோ, வரவர அளவிற் குறைந்துகொண்டே வந்தது; கடைசியில் மிகக் கசப்பான சில தழைகளும் கொஞ்சம் மிளகுமே தினப்படி ஆகாரமாயின. சிலநாட் கழித்து, கங்கை நதியின் மறுகரையிலுள்ள காடுகளுக்கு ஒவ்வொரு இரவும் செல்லும் வழக்கத்தை விட்டுவிட்டுத் தமது குகையிலேயே அவர் வெகுநேரம் தங்கியிருக்கலானார். பல நாட்கள், ஏன்? பல மாதங்கள் கூட அவர் தமது குகையினுள் தியானத்தில் ஆழ்ந்திருந்தார். இங்ஙனம் குகையினுட் கழித்த நீண்டகாலங்களில் அவர் எதை உட்கொண்டு வாழ்ந்தாரென எவரும் அறியவில்லை; இதன் பயனாகவே ஜனங்கள் பவாஹாரி பாபா என்ற பெயரை அவருக்களித்தனர். [பவ என்றால் காற்று; ஆஹாரிஎன்றால் புசிப்பவன்; பாபா என்றால் தந்தை அல்லது பெரியார் என்று பொருள்.]

அவர் தமது வாழ்நாளில் ஒருபொழுதும் தாம் வசித்த இடத்தைவிட்டுப் பெயர்ந்ததேயில்லை. ஒரு சமயம் அவர் நீண்ட காலம் குகையின் உள்ளேயே தங்கியிருந்தனர்; அப்பொழுது ஜனங்கள் அவர் இறந்து போய் விட்டதாகவே எண்ணிவிட்டனராம்; ஆனால் பல தினங்கள் கழித்துப் பவாஹாரி பாபா வெளியில் வந்து அளவற்ற சாதுக்களுக்குப் பெருஞ்சோறு அளித்தார்.

தியானத்தில் அமர்ந்திராத நேரங்களில் அவர் குகைத் துவாரத்திற்கு மேலே யிருந்த ஒரு அறையில் தங்கியிருப்பது வழக்கம்; அச்சமயத்தில் அவர் தம்மைத் தரிசிக்க வருவோரை வரவேற்றுப் பேசுவார். வரவர அவரது கீர்த்தி எங்கும் பரவிற்று. அச்சமயம் கம்பீர குணத்தாலும் பெருந்தன்மையாலும் தீவிரமான வைதிக சிரத்தையாலும் எல்லோருடைய பிரேமையையும் மதிப்பையும் பெற்றிருந்த, காஜிபூரில் அபினி இலாகாவைச்சேர்ந்த ராய் ககன் சந்திரராய் பகதூர் என்ற கனவானே நம்மை முதன்முதலாக இந்த யோகியைத் தரிசிக்கச்செய்தார்.

இந்தியாவில் பல மகான்களைப் போலவே, இந்த யோகியினுடைய தோற்றத்திலும், வெளியே நன்கு தோன்றக்கூடிய ஊக்கமோ மற்றவரை இயக்கக் கூடிய வெளிச் சுறுசுறுப்போ சிறிதும் கிடையா. வார்த்தைகளின் மூலமல்லாது வாழ்க்கையின் மூலமே உபதேசிக்கக்கூடுமெனவும், கிரகித்துக்கொள்ளும் சக்தியைப் பூரணமாகப் பெற்றுள்ள ஜீவர்களிடம் மட்டுமே தத்துவோபதேசமானது பயன் பெறுமெனவும் சாற்றும் இந்திய சித்தாந்தத்திற்கு இந்தயோகியும் ஒரு உத்தம நிதரிசனமாக விளங்கினர். இந்த கோஷ்டியைச் சேர்ந்தபெரியார் தங்களுக்குத் தெரிந்த ஞானத்தைப் பிரசாரம் செய்வதையும் உபதேசிப்பதையும் அறவே வெறுக்கின்றனர்; ஏனெனில், ஆத்ம சோதனையும் மன ஒடுக்கமுமே யன்றி வெறும் வார்த்தைகள் நம்மை உண்மைப் பொருளினிடம் கொண்டுபோவதில்லை யென்பதை அவர்கள் நன்கு உணர்ந்திருக்கின்றனர். மதம்

என்பது, சமூக ஏற்பாட்டிற் கேற்ற ஒருகருவியன்று; இந்தவாழ்க்கையிலேயே உண்மைப்பொருளைத் தீவிர மாகத் தேடி யலைந்துஅதைச்சாக்ஷாத்கரிப்பதொன்றே என அவர்கள் கருதுகின்றனர்.

அழிவற்ற காலநிலையில் ஒரு நொடிப்பொழுதைக் காட்டிலும் வேறொரு குறிப்பிட்ட க்ஷணம் அதிக சக்தி யையோ விசேஷத்தையோ கொண்டிருக்கக் கூடுமென் பதை அவர்கள் முற்றிலும் மறுக்கின்றனர். எனவே அகண்டமான சாசுவத நிலையில் ஒவ்வொரு நொடியும் மற்றெந்த க்ஷணத்திற்கும் சமமாகவே இருப்பதால் அவர்கள் மரணம் வரும் நேரம் வரை காத்திராமல் இங்கேயே இப்பொழுதே வேதாந்தத்தின் உண்மை களை நேருக்கு நேராகக் கண்டு ஆக வேண்டுமென வற் புறுத்துகின்றனர்.

தமது குகையைவிட்டு வெளிவந்து உலகிற்கு உதவிசெய்ய முன்வராத காரணமென்னவென பவா ஹாரி பாபாவைக் கேட்கும் சந்தர்ப்பம் எமக்குவாய்த் தது. அதற்கு அம்முனிவர் வேடிக்கையாகத் தமது இயல்பான வணக்கத்துடன் கீழ்வரும் உறுதியான விடையை யளித்தார்.

''ஒரு சமயம் துஷ்டனொருவன் ஏதோ ஒரு குற்றத் தைச் செய்து கொண்டிருந்தான்; அப்பொழுது யாரா லோ கண்டு பிடிக்கப்பட்டு அதற்குத்தண்டனையாக மூக் கறுபட்டுப் போனான். மூக்கிழந்த தனது முகத்தை வெளிக்காட்டவும் வெட்கமுற்றவனாய் அவன் வாழ்க்கை யின்மீதே அருவருப்படைந்து, ஒரு காட்டிற்குள் ஓடிப் போனான்; அங்கு தரைமீது ஒரு புலித்தோலை விரித்து

அதன் மீதமர்ந்து யாரேனும் சமீபத்தில் வருகிற அரவம் கேட்டால் தியானத்தில் ஆழ்ந்திருப்பதுபோல் பாவனை செய்யும் வழக்கத்தைக் கைக்கொண்டான். ஆனால் இதன் மூலம் ஜனங்கள் தன்னிடம் நெருங்குவதை அவன் தடுக்க முடியவில்லை. இந்த அபூர்வ சந்நியாசியைத் தரிசித்துப் போற்றுவதற்கு மாந்தர் கூட்டம் கூட்டமாக முன்வரலாயினர்; வெகு சீக்கிரத்தில் தனது ஆரண்யவாசமும் வெகு சுலபமாகப் பிழைப்புக்கு ஒருவழியாக ஆனதை அத்துஷ்டன் கண்டு கொண்டான். இங்ஙனம் பலவருடங்கள் கழிந்தன. கடைசியாக இந்த மௌன குருவினுடைய வாயிலிருந்து சில உபதேசமொழிகளைக் கேட்கவேண்டுமென்ற அவா அவரது சிஷ்யகோடிகளுக்குத் தீவிரமாக ஏற்பட்டு விட்டது; அவர்களுள் முக்கியமாக ஒரு வாலிபன் அம்முனிவரது நிலையையே தாமும் பின்பற்றவேண்டுமென்ற ஆவல் கொண்டிருந்தான். இந்த ஆசையானது யாவர் மனத்திலும் வேகமாக விருத்தியடைந்து வந்தது. அந்த யோகீசுவரர் மௌனம் சாதித்து வந்ததால், நாளடைவில் கீர்த்திக்கே குறைவு ஏற்பட்டு விடக்கூடிய நிலைமை வந்துவிட்டது. இதை யறிந்த யோகீசுவரர் ஒருதினம் தமது வாயைத்திறந்து ஆவல் மிகுந்த வாலிபனை நோக்கி, மறுதினம் ஒரு கூரிய கத்தியுடன் திரும்பிவருமாறு கட்டளையிட்டார். தனது வாழ்க்கை முழுவதும் விரும்பி வந்த மனோரதம் வெகு சீக்கிரத்தில்நிறைவேறப்போவதைக்கண்டு பேரானந்தமடைந்த அவ்வாலிபன் மறுநாள் அதிகாலையில் ஒருகத்தியுடன் திரும்பிவந்தான். உடனே மூக்கறுந்தமுனிவர் அவ்

வாலிபனைக் காட்டினுள் ஒதுப்புறமா யிருந்த ஓர் இடத்திற்கு அழைத்துச்சென்று, கத்தியைக் கையி லெடுத்து அவனது மூக்கை அறுத்தெறிந்துவிட்டு, கம் பீரமான குரலில், 'வாலிபனே! நான் இந்த நிலையைக் கைப்பற்றியவிதம் இதுவே யாகும். இதையே உனக்கும் நான் அளிக்கிறேன். நீயும் தக்க சமயம் வாய்க்கும் பொழுதெல்லாம் இதை மற்றவர்களுக்கு ஜாக்கிரதையாக அளித்து வருவாயாக!' என உப தேசித்தருளினார். அவமானம் நேருமென்ற பயத் தால் இந்த ஆசிரமப் பிரவேசத்தின் அருமையான ரகசியத்தை அவ்வாலிபன் யாருக்கும் வெளியிடக் கூட வில்லை; தன்னுடைய சக்திக்கேற்றவாறு அவன் தனது குருவின் உபதேசம் முழுவதும் பின்பற்றி நடந்துவந்தான். இங்ஙனம் தேசமுழுவதும் மூக்கறு பட்டமுனிவரது கூட்டம் ஒன்று பரவிவிட்டது. அத் தகைய சந்நியாசிக் கூட்டமொன்றை நானும் ஸ்தாபிக்க வேண்டுமென நீங்கள் விரும்புகிறீர்களா?"

பின்னொருசமயம் வேறொரு கேள்வி கேட்டபொ ழுது அவர், "ஸ்தூலசரீர சம்பந்தமான உதவி யொன்று தான் சாத்தியமான உதவியென நீங்கள் எண்ணு கிறீர்களா? சரீரமுயற்சியின்றியே ஒருமனம் மற்றொரு மனத்திற்கு உதவிசெய்வது சாத்தியமாகாதா?" என அழுத்தமாக விடையளித்தார்.

ஸ்ரீ ராம பூஜை, ஹோம ஆகுதி முதலியன போன்ற ஆரம்ப நிலையிலுள்ளவர்களுக்கே நிர்ண யிக்கப் பட்டுள்ள கர்மங்களை மகா யோகியான நீங் களும் ஏன் செய்யவேண்டுமெனக் கேட்டபொழுது

அவர், "ஒவ்வொருவனும் தன் தன் நன்மைக்கே கர்மம் செய்கிறன் என்பதை ஏன் பொதுவிதியாகக் கொள்ளு கிறீர்கள்? மற்றவர்களின் நன்மையை உத்தேசித்து ஒருவன் கர்மம் செய்யக்கூடாதா என்ன?" என்று பதில் கூறினர்.

அவரைப்பற்றி இன்னொரு சம்பவமும் கூறப்படு கிறது; ஒருசமயம் அவரது ஆசிரமத்தில் திருடும்நோக் கத்துடன் அங்குவந்த கள்ளனொருவன் யோகியைக் கண்ட மாத்திரத்தில் பீதியடைந்து, தான் முன் னமே திருடிவந்த பொருள்களடங்கிய மூட்டை யொன்றை அங்கேயே விட்டுவிட்டு ஓட்டமெடுத்தான்; அந்த மகரிஷியோ மூட்டையைக் கையில் எடுத்துக் கொண்டு திருடனைப் பின்தொடர்ந்து அனேக மைல் கள் விடாது ஓடியபின் அவனைச் சமீபித்து, அம்மூட் டையை அவனது பாதங்களில் சமர்ப்பித்துக் கூப்பிய கையுடனும் கண்ணீர்சொரியும் கண்களுடனும் தம் மால் அவனுக்கு ஏற்பட்ட சிரமத்தைப் பொறுத்தரு ளும்படி மன்றடி, தாம் கொண்டு வந்திருந்த பொருள் கள் தம்முடையதின்றி அவனுக்கே சொந்தமானபடி யால் அவைகளை அங்கீகரிக்கும்படி வேண்டினராம்.

மேலும், மற்றொரு சமயம் சர்ப்பத்தினல் அவர் கடிக்கப்பட்டதாகவும், வெகுநேரம்வரை இறந்து விட்ட தாகவே யாவராலும் கருதப்பட்டும் கடைசியில் தெளிவு பெற்று எழுந்ததாகவும், பின்பு அதைப்பற்றி அவரது சிஷ்யர்கள் வினவியபொழுது, 'அந்த சர்ப்பமானது பகவானிடமிருந்து வந்த ஒருதூதனே' எனப் பதிலளித் ததாகவும் நம்பத்தக்க மனிதரால் கூறப்படுகிறது.

ஆம் ! அம்முனிவருடைய அபாரமான அடக்கத்தையும் வணக்கத்தையும் அவரது சுபாவமான அன்புக்குணத்தையும் நேரிற்கண்டுள்ள நாம் அதை நம்பாமல் இருக்கமுடியாது. எந்தவிதமான சரீரத்துன்பமாயினும் அவையாவும் அவருக்குப் 'பகவானிடமிருந்து வரும் தூதர்களே' யாகும். தாம் அவைகளால் தீவிரமாக வதைக்கப்படும்போதும்கூட இதைத்தவிர வேறு பெயரிட்டழைப்பது கூட அவருக்குப் பொறுக்கமுடியாது.

மௌனமான,— ஆடம்பரமற்ற,— இந்தஅன்பும், கருணையும், அருட்பிரபாவமும் சுற்றியிருந்த ஜனங்களினிடையே நன்கு பரவிவிட்டன; அவரது ஆசிரமத்திற்குச் சமீபத்திலிருந்த கிராமங்களில் பிரயாணம் செய்திருப்போர்கள் இந்த அபூர்வமுனிவரது ஒப்பற்ற மாட்சிமையைப்பற்றி நன்கு அறிந்திருக்கலாம்.

பிற்காலத்தில் பவாஹாரி பாபா அதிகமாக வெளிவருவதையே நிறுத்தி விட்டார். அவர் எப்பொழுதாவது தமது குகையிலிருந்து வெளிவந்தாலும் பிறருடைய பார்வைக்கு உள்ளாகாது தமது அறையின் கதவைத் தாளிட்டுக்கொண்டே வெளியிலிருக்கும் ஜனங்களுடன் சம்பாஷித்து வந்தார். அவர் குகையை விட்டு வெளிவந்தார் என்பதற்கு அடையாளமாக ஹோமகுண்டத்தினின்று புகை ஏராளமாகக் கிளம்பிக்கொண்டோ, பூஜைக்கு வேண்டிய சாமான்களைச் சேகரிக்கும் சத்தம் காதில் விழுந்துகொண்டோ இருக்கும். அவரிடத்தில் இன்னுமொரு விசேஷகுணமும் உண்டு; எவ்வளவு அற்பமான காரியத்தைச் செய்தபோதிலும்

தமது மனம் முழுவதையும் அவர் அந்த ஒரு செய்கையி லேயே செலுத்துவார். ஸ்ரீ ரகுநாதனைப் பஜிப்பதில் காட்டும் அதே சிரத்தையையும் கவலையையும் அவர் ஒரு பாத்திரத்தைச் சுத்தி செய்வதிலும் காட்டுவார். 'லக்ஷியத்தினிடத்தில் நமக்குள்ள பிரேமையும் பற்று தலும் கவலையும் அந்த லக்ஷியத்திற்குச் செல்லும் மார்க்கத்தின் மீதும் (இந்த மார்க்கமே நமது லக்ஷியம் போல) செலுத்தப்படவேண்டும்' என ஒருசமயம் அவர் எங்களுக்கு உபதேசித்த கர்ம ரகசியத்திற்குச் சிறந்த நிதரிசனமாக அவரே விளங்கினார். அவருடைய வணக்கமும் அடக்கமும், துன்பம் கவலை பணிவு முதலியவற்றைக்காட்டும் தாழ்மைக்குணமன்று. 'அர சனே! எப்பொருளுமில்லாதாருக்கும், பொருளைப் பெறவேண்டுமென்ற ஆசையையே ஒழித்து விட்ட வருக்கும், தம்மீது பற்றற்று விட்டவருக்கும் பக வானே எல்லாப்பொருளுமாவார்' என்பதை ஒருமுறை மிக அழகாக எங்களுக்கு அவர் உபதேசித்த அவ்வுண் மையை அனுபவித்தறிந்ததினின்றும் இயல்பாகக் கிளம்பிய வணக்க குணமே அவரிடம் நிறைந்திருந்தது.

அவர் எப்பொழுதும் நேருக்கு நேர் யாருக்கும் உபதேசம் செய்யார்; ஏனெனில், அவ்விதம் செய்வது தம்மை ஒருகுருவின் நிலைக்கு உயர்த்திக்கொண்டு பிறரைக்காட்டிலும் தாம் மேலானவர் என எண் ணுவதாகும் என்று அவர் நம்பினார். ஆனால் அவ ரது ஞான ஊற்றை ஒருமுறை திறந்துவிட்டால் அதினின்றும் ஞானநீர் வெள்ளமாகப் பெருகியோடும்; அப்பொழுதும் அவரது விடைகள் சொல்லாமற் சொல்

லும் வகையிலேயே யிருக்கும். தோற்றத்தில் அவர் சற்று உயரமாகவும் நல்ல தசைப் பிடிப்புள்ள சரீரத்தைப் பெற்றும் இருந்தார்; அவருக்கு ஒரு கண்ணே இருந்தது; அவரது உண்மையான வயதைக் காட்டிலும் சற்றுக் குறைந்தவயதினராகவே வெளிக்குத் தோற்றினார். நாம் கேட்டிருக்கும் குரல்கள் எல்லாவற்றிலும் அவர் குரல் அதிமதுரமானது; மிக இனிமையானது. தமது வாழ்க்கையின் கடைசிப் பத்து வருஷ முழுவதும் அவர் மனிதர் பார்வைக்கே சிறிதும் அகப்படாமல் மறைந்திருந்தார். அவரது அறைக்கு முன்புறம் சில கிழங்குகளேயும் கொஞ்சம் வெண்ணெயையும் யாராவது வைப்பார்களானால், இரவில் எப்பொழுதேனும் சமாதிகலைந்து மேலே வந்தால் இந்த ஆகாரத்தை அவர் எடுத்துக் கொள்ளுவார். குகைக்குள்ளிருக்கும் பொழுதோ இச்சிறு உணவும் அவருக்குத் தேவையில்லை.

இங்ஙனம் யோக சாஸ்திரத்திற்கே இலக்கியமாய், தூய்மை, வணக்கம், அன்பு என்ற குணங்களுக்கு இருப்பிடமாய் இந்த மகான் தமது மௌனவாழ்க்கையை நடத்திவந்தார். முன்பே கூறியது போல அவர் சமாதி கலைந்து மேலே வருவதற் கடையாளமான ஹோமகுண்டத்தின் புகையானது ஒருதினம் மனித சரீரம் எரிக்கப்படும் நாற்றத்தை வீசியது. சுற்றியிருந்த ஜனங்களால் எதையும் ஊகிக்கக்கூடவில்லை; கொஞ்சம் கொஞ்சமாக துர்நாற்றமும் சகிக்கமுடியாது போய்ப் புகையும் ஏராளமாக வெளிவரத் தொடங்கியது. உடனே ஜனங்கள் கதவை உடைத்துக்

கொண்டு உள்ளேசென்று பார்க்க, அங்கு தமது ஹோமாக்னிக்குத் தம்மையே கடைசி ஆகுதியாக அர்ப்பித்துக்கொண்டுவிட்டதைக் கண்டனர்; சிறிது நேரத்திற்கெல்லாம் அவரது சரீரம் இருந்த இடத்தில் ஒரு குவியற் சாம்பலே எஞ்சி நின்றது.

'மகான்களுடைய காரியங்கள் அசாதாரணமாயும் அவைகளுடைய காரணங்கள் சாமான்ய மனிதரின் அறிவுக்குப் புலப்படாதவையாயும் இருப்பதால் அக் காரியங்களை மூடர்கள் இகழ்ந்து கூறுகின்றனர்' என்ற கவி காளிதாசரது வாக்கியத்தை நாம் ஞாபகத்தில் வைப்போமாக!

ஆனால் அவருடன்கூடஇருந்து பழகிய நாம் இந்த அபூர்வச்செய்கையை ஒரு விதத்திலே தைரியமாக விளக்கிக்கூறுவோம்; தமது அந்தியகாலம் சமீபித்து விட்டதென்பதை முன்பே அறிந்த அம்முனிவர் தமது மரணத்திற்குப் பின்னும் மற்றவருக்குச் சிறிதும் சிரம மளிக்க மனமற்றவராய்ச் சரீரமும் மனமும் பூரண சுவாதீனத்தில் இருக்கும்பொழுதே தமது யாகத்திற்கு இந்தக் கடைசி அர்க்கியத்தைச் செய்திருக்கவேண்டும்.

பூமியிலிருந்து இவ்விதம் மறைந்துவிட்ட இம்மகா னுக்கு யாம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்; யாம் பிரேமைகொண்டு சேவித்த குருநாதர்களுள் ஒருவரான இம்மகானது ஞாபகார்த்தமாகவே இச்சிறுநூலை—அது எவ்வளவு தகுதியற்றிருந்தபோதிலும் — அர்ப்பணம் செய்துவிடுகிறோம்.

ஓம் தத் ஸத்.

Kesari Printing Works, Madras.

# முகவுரை

1893-ம் வருஷம் அமெரிக்க நாட்டில் கூடிய சர்வமத மகா சபையில், ஸ்ரீமத் விவேகாநந்த ஸ்வாமிகள் ஹிந்துமதத்தை நிலை நாட்டினாரென்பது யாவரும் அறிந்ததே. அச்சபைக் கலைந்தபிறகு அந்நாட்டில் சில வருடங்கள் ஹிந்து மதத்தைப் பரவச் செய்யும் பெரிய கைங்கரியத்தில் ஈடுபட்டு, மேல்நாட்டாரும் நன்கு மதிக்கும்படி உழைத்தார் என்பது எல்லாருக்குந் தெரிந்த விஷயமே. பிறகு இம்மகான் இந்தியாவுக்குத் திரும்பி வந்தபோது முதல் முதல் இலங்கையிலுள்ள கொழும்பு நகரத்தி லிறங்கி அங்கிருந்து வட இந்தியாவிலுள்ள ஆல்மோரா என்னும் இடத்திற்குப் போகும் வரையில் ஆங்காங்கு அனேக விடங்களில் அரிய பெரிய பிரசங்கங்கள்செய்தார். இப்பிரசங்கங்களில் அதிக முக்கியமானதும், எல்லாருடைய மனதையும் அதிகமாய்க் கவர்ந்ததுமான 'எனது போர் முறை' என்னும் இப்பிரசங்கம் சென்னைப்பட்டினத்தில் 1897-ம் வருஷத்தில் செய்யப்பட்டது. ஸ்ரீமத் சுவாமிகள் தாம் மேல் நாட்டிலிருந்தபோது அடைந்த அனுபவங்களையும், அவ்வனுபவங்களால் தமக்கு தமது தாய் நாட்டின்பேரில் விளைந்த தேசாபிமானத்தையும், இந்தியாவின் முன்னேற்றத்திற்கான பல வழிகளையும் தெளிவாக எடுத்துரைத்திருக்கின்றமையின், நமது தேசாபிமானிகள் யாவரும் இவைகளை வாசித்துப் பயன் பெறுமாறு பிரத்தியேகமாக மேற்கண்ட பிரசங்கம் தமிழில் அச்சிடப்பட்டிருக்கிறது. பிரசங்கத்தின் அருமை அதனை வாசித்தலினாலேயே விளங்குமாதலின் அதனைப் பற்றி கூறுதொழிந்தனம்.

ஸ்வாமி சர்வாநந்தா

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்,
மயிலாப்பூர்.

5—2—1926.

# எனது போர் முறை

காட்ட மிகுதியால் அன்றையதினம் நம்மால் சரிவர நடத்த முடியாமற் போனதினாலே, சென்னை வாசிகள் ஒரு மனதாய் என்னிடம் காட்டிய பேரன்பிற்காக என் வந்தனத்தைச் செலுத்துவதற்கு ஏற்றதாக இத்தருந்த தருணத்தை எடுத்துக் கொள்கிறேன். எனக்களிக்கப்பட்ட அந்த வரவேற்புப் பத்திரங்களின் ஒவ்வொன்றிலுமுள்ள அழகான சொற்களுக்காக, என்னை அதிற்கண்டுள்ள பெரியதும் பெருமையும் வாய்ந்த மொழிகளுக்குத் தகுந்த பாத்திரனய்ச் செய்யும்படி ஆண்டவனைப் பிரார்த்திப்பதைத் தவிர, எனது நன்றியறிதலை வேறு எவ்விதம் சரிவர எடுத்துச் சொல்வதென்பது எனக்கு விளங்கவில்லை; நம்முடைய மதத்திற்காகவும், நம்முடைய தாய் நாட்டிற்காகவுமே எனதுயிருள் ளளவும் நான் உழைக்கவும், அவற்றிற்கு என்னைத் தகுதியுடையவனய்ச் செய்யவும் கடவுள் அருள் புரிவாராக.

சீமான்களே! எனது எல்லாக் குறைகளுக்குமிடையே என்னிடம் கொஞ்சம் தைரியமும் இருப்பதாக நான் எண்ணுகிறேன். இந்தியாவிலிருந்து மேற்குத் திசைக்குச் செல்லவேண்டிய செய்தி யொன்று என்னிடமிருந்தது; அதை யான் தைரியமாக அமெரிக்கர்களுக்கும் ஆங்கில ஜனங்களுக்கும் அளித்தேன். உங்களுக்கு, நான் இன்றைய விஷயத்தை யெடுத்துக் கொள்வதற்கு முன்னே, சில தைரியமான வார்த்தைகளைப் பேச விரும்புகிறேன். என்னை

எதிர்க்கவும் எனது முன்னேற்றத்தைத் தடுக்கவும், கூடுமானால் என்னை யெங்குமில்லாதபடி அடியோடு ஒழித்துப் போடும்படியான சில யுக்திகள் என்னைச் சுற்றி நிகழ்ந்து வந்தன. இவ்வித அற்ப காரியங்கள் எக்காலத்தும் முற்றுப் பெறாவாதலால், அதன்படி இவைகளும் தவறிப்போனதற்குக் கடவுளைப் போற்றுவோமாக! ஆனால் சென்ற மூன்று வருஷங்களாக சில புரட்டுக்கள் இருந்து வந்திருக்கின்றன; நான் வெளி நாடுகளில் இருக்குமளவும் ஒரு வார்த்தையும் பேசாது மௌனமாயிருந்தேன். ஆனால் இப்பொழுது எனது தாய்நாட்டின் நிலத்தில் நின்றுகொண்டு அவற்றை விளக்கும்பொருட்டு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அவ்வார்த்தைகளின் பயனாய் என்ன நேரிடுமோவென்று நான் சிறிதும் கவலை கொள்ளவில்லை; அவ்வார்த்தைகளிலிருந்து நீங்கள் என்னைப்பற்றி என்ன அபிப்பிராயங் கொள்வீர்களென்பதைப் பற்றியும் நான் யோசிக்கவில்லை. அதைப்பற்றி எனக்குச் சிறிதும் கவலையில்லை. ஏனென்றால், நான்கு வருடங்களுக்கு முன்னால் ஒரு தடியும் கமண்டலத்தையும் கையிற்கொண்டு உங்கள் நாட்டிற்குள் எவ்வித சன்னியாசியாக நுழைந்தேனோ அதே சன்னியாசியாக இன்றைக்கும் நான் இதோ இப்பரந்த உலகத்தை என் முன்னாற் கொண்டு இங்கு நிற்கின்றேன். முகவுரையை அதிகமாக வளர்த்தாமல், விஷயத்தை யான் ஆரம்பிக்கிறேன். 'தியஸாபிகல்' சபை (Theosophical Society)யைப் பற்றித் தலைப்பிலேயே சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இத் தியஸாபிகல் ஸபையாரால் இந்தியாவில் உண்மையாகவே சிறிது நன்மை பயக்கப்பட்டிருக்கிறதென்பது சொல்லாமலே விளங்கும். ஆதலால் இவர்களிடம், முக்கியமாக அன்னீ பெஸண்ட் அம்மாளிடம், ஒவ்வொரு ஹிந்துவும் நன்றி பாராட்டுகின்றனன். இவரைப்

பற்றி நான் ஒரு சிறிதே அறிந்துள்ளே னென்றாலும், அறிந்தமட்டில், இவர் நமது தாய் நாட்டிடம் யதார்த்த மான நல்லெண்ணங் கொண்டவராயும், தனது சக்திக் கியன்றளவு நமது நாட்டின் முன்னேற்றத்திற்காக வேலை செய்து வருவதாகவும் நான் அபிப்பிராயப் படுகிறேன். அதற்காக ஒவ்வொரு உண்மையான இந்தியனுடைய நன்றி யறிதலும், எல்லா ஆசீர்வாதங்களும், அவரையும் அவ ருடைய சகாக்களையும் அடைவதாக. ஆயினும் இஃதொரு தனிவிஷயம்—தியஸாபிகல் சங்கத்திற் சேருவதென்பது வேறொன்றாகும். ஒருவர் ஏதாவதொன்று சொன்னால் அதைப் பாராட்டுவது, மதிப்பது, பிரியப்படுவது ஒரு விஷயம்; அதைச் சிறிதும் யோசித்துப் பாராமலும், கண் டனம் செய்யாமலும், தீர அலசிப்பார்க்காமலும் அப்படியே ஒப்புக்கொண்டு விடுவதானது முற்றிலும் மாறுபட்ட விஷய மாகும். அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும் நான் பெற்ற சில நன்மைகளுக்காக இத் தியஸாபிக் சங்கத்தார் மிகவும் உதவி செய்ததாக எங்கும் பிரஸ்தாபம் இருந்து வருகிறது. இதில் ஒவ்வொரு வார்த்தையும் தப்பென்று நான் உங்க ளுக்குச் சொல்ல வேண்டியிருக்கிறது; ஒவ்வொரு வார்த்தை யும் பொய்யேயாகும். இவ்வுலகத்திலே பல்வேறு அபிப் பிராயங்களிடத்தும் தயாள எண்ணம், அனுதாபம் முதலி யவைகளைப்பற்றி எங்கு பார்த்தாலும் வெகு பிரமாதமான பிரசங்கங்களைக் கேட்கிறோம். இது மிகவும் மேன்மை யானதே; ஆயினும் உண்மையில், ஒருவன் தான் சொல் லும் எல்லா வார்த்தைகளையும் மற்றொருவன் நம்பும் வரை யில், அவனிடம் மிகவும் தயாளமாயிருக்கிறான்; மாறான அபிப்பிராயங் கொள்ளத் துணிந்தாலோ, அந்த க்ஷணமே எல்லா தயாள குணமும் பறந்துவிடும்; அந்த அனுதா பமும் அன்பும் மறைந்துபோகும்.

பிறகு, தங்களிஷ்டம்போல் கோடரியைத் தீட்டும் வேறு சிலர் இருக்கின்றனர்; எந்நாட்டிலேனும் இதற்குத் தடங்கல் விளைக்கக் கூடிய ஏதாவதொரு சம்பவம் நேரிட்டு விட்டாலோ அவர்களின் உள்ளம் எரிகின்றது; அளவற்ற குரோதம் உண்டாகிறது; இன்னது செய்வதென்று அவர்களுக்குத் தோற்றவில்லை. இந்தியர் தங்கள் வீடுகளைத் திருத்திக்கொள்ள முயலுகிறார்களென்றால், இந்தக் கிறிஸ்தவப் பாதிரிமார்களுக்காவதென்ன? இந்தியர் தங்களாலியன்ற அளவு தாங்களே சீர்திருத்தம் செய்துக்கொள்ள முயலுகிறார்களென்றால், இந்த பிரம்ம ஸமாஜத்தாருக்கும் மற்ற சீர்திருத்தக்காரர்களுக்கும் விளையும் தீங்கென்ன? ஏன் அவர்கள் எதிர்த்து நிற்கவேண்டும்? ஏன் இவ்வியக்கங்களுக்கு அவர்கள் மிகவும் விரோதிகளாயிருக்கவேண்டும்? ஏன்? ஏன் என்றுதான் கேட்கிறேன்! ஏனென்றுவது எப்படியென்றுவது கேட்கக் கூடாதபடி அவ்வளவு கொடுமையானதாய் அவர்களுடைய பொறாமையும் பகைமையும் இருப்பதாய் எனக்குத் தோற்றுகிறது. நான்கு வருஷங்களுக்கு முன்னால், எவருமறியாத ஒரு எளிய துணையற்ற சன்னியாசியான யான் ஸமுத்திரங்களைக் கடந்து வெகு தூரத்திற்கப்பாலுள்ள அமெரிக்காவுக்குப் போகுங்காலத்தில், எனக்கு எவ்வித சிபார்சும் இல்லாததாலும், அன்றி அத்தேசத்தில் உதவி புரியக்கூடிய நண்பர்கள் எவருமில்லாதபடியாலும், தியஸாபிக் சங்கத்துத் தலைவரின் உதவியைச் சற்று எதிர்பார்த்தேன். அவர் அமெரிக்க தேசத்தினராதலாலும், இந்தியாவின்மேல் பற்றுள்ளவரென நான் நினைத்ததாலும், அந்நாட்டிலுள்ள யாராவது சிலரிடம் என்னை அறிமுகம் செய்து ஒரு சிபார்சுக் கடிதம் கொடுக்கும்படி வேண்டினேன். அதற்கு அவர் "நீர் தியசாபிக் சங்கத்தில் சேருவீரா?" என்று என்னை வினவினார்.

